# உலக மதங்கள்








## அகில உலக மத மகாநாடு

மதுரை - 1977.

௨ ரூபாய்.

# உலக மதங்கள்

தொகுத்தவர்கள் :
(ஸ்வாமி)
**மீனாக்ஷி இராமன்.**
**"ஞானபிரகடனம்"**
C/o. 21. மேலாவணி மூலவீதி.
**மதுரை - 1**

ஆ. அனந்த ராசன்,
துணைத் தமிழ் பேராசிரியர்,
தியாகராசர் கல்லூரி,
மதுரை.

2 ரூபாய் விலை ரூ [redacted]



" ஞானம் நிறைந்தவர்களுடைய மௌனமே —
மௌனம்.

சக்தி நிறைந்தவர்களுடைய பொறுமையே —
பொறுமை "

(காளிதாஸர் வாக்கு)

ஆரியமாய் அறம் பொருள் இன்பம்
வீடு அளிப்பது நூல்

முழு நம்பிக்கையுடன் எந்த தெய்வத்தை யார் வணங்கினாலும் அது என்னை வணங்குவதே யாகும்.

(பகவத்கீதை 9—23)

ஹாலஸ்ய க்ஷேத்திரம் என்று விளங்கும் ஆதி பராசக்தியின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட தேவி மீனாக்ஷி அம்மை பரிபாலனம் செய்துவரும் இடத்தில், சிவபெருமான் தனது அறுபத்து நான்கு லீலைகளையும் புரிந்த மதுரை மா நகரத்தில், அறுபத்து நான்கு சக்தி பீடங்களுக்குள் உட்பட்ட ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் விருப்பபடியும், மகானுடைய ஆசீர்வாதத்தாலும் வருகிற மார்ச்சு மாதத்தில் " உலக மத மாநாடு " ஒன்று நடைபெற சில பிரமுகர்கள் ஏற்பாடு செய்து வருவது பொதுமக்களுக்கு தெரியும். இதற்கு முன் இம்மாதிரியான மாநாடு பல தத்துவ அறிஞர்களின் விவாதமும் 1952ல் இருந்து நடைபெற்று வருகிறது. ஆனால் அம்மாநாட்டில் குறிப்பிட்ட நபர்களைத்தவிர பொதுமக்கள் கலந்துகொள்ள வாய்ப்பில்லை. அறியாத பாமரமக்கள் எப்படி 1252ல் இருந்தார்களோ அதே போன்று 1977ல் உள்ளனர். இதை இவர்கள் அறியாததற்கு ஒரே காரணம், இவை கொள்கைவாதமாகமட்டுமே கருதப்பட்டுவந்ததேயாகும்.

உலகத்தில் சுமார் 150 மதங்கள் உள்ளது. பாரதத்தில் பல மதங்கள் உள்ளன. அவை அனைத்தும் வேதத்தை உடன்பட்டு நடப்பன "அகச்சமயம்" என்றும் வேதத்தை மறுகலித்து நடப்பன "புறச்சமயம்" என இருவகைப்படும்.

**கடவுள் இல்லையேல் மதம் கிடையாது.**

கடவுள் இல்லையேல் மதம் கிடையாது. மதம் வெறும் கொள்கை வாதமாக மட்டும் கருதப்பட்டால் அதற்கு கடவுளே வேண்டாம். மத உள்ளுணர்வுக்கு ஓர் மதிப்பிற்குரிய லட்சியம் தேவை. கடவுள் இல்லாத ஜைன மதமும், புத்தமதத்திலும் ஓர் உண்மையான வாழ்வில் முக்தியடைய ஒரு லட்சியம் இருக்கிறது என ஜெயப்பூர் மகாராஜா கல்லூரியை சேர்ந்த டாக்டர் ஆர். பி. சிங் கூறியுள்ளார். இதே மாநாட்டில் தார்வாரை சேர்ந்த பேராசிரியர் என். ஆர். குல்கர்னி மதம் வெறும் கொள்கை வாதமாக கருதப்பட்டால் அதற்கு கடவுள் தேவையில்லை.

மதம் நம் ரத்தத்தில் ஊறிக்கிடக்கிறது அதை ஒழித்தால் விபரீதம் விளையும். பாரத தேசம் மத சார்பற்ற தேசமாயினும் அவரவர்களுக்கு மத உரிமை உண்டு. மதம் அவர்களுடைய ஜீவநாடியாகத்தான் இருந்துகொண்டு வருகிறது. எந்த ஒரு விதத்திலும் மதத்தை ஒழிக்க முற்பட்டாலும் அதனுல் விபரீதம் விளையும். இது எந்த ஒரு மதத்தையும் குறிப்பிடவில்லை, சகல மதங்களின் அடிப்படை தத்துவமும், மத உணர்ச்சியும் கல்வி ஸ்தாபனங்களில் வேரூன்றி பரவவேண்டும் என்பது அடியேன் ஆசை.

ஸ்வாமி விவேகாநந்தர் அமெரிக்காவுக்குச் சென்று சிகாகோ நகரில் ஹிந்து மதம் பற்றி பிரச்சாரம் செய்கையில் நான் ஒரு சிறு இந்தியா, அல்லது இந்தியாவின் சாறு (CONDENSED INDIA) எனக்கூறி மேலும் எந்நாட்டில் நாய் பசித்திருக்கும்போது அதற்கு சோறு போடுவதுதான் என் சமயம் என்றுர். இவரது ஹிந்து மதம்பற்றி பேச்சாற்றல் கண்டு அங்குள்ள மக்கள் ஹிந்து மதம் பற்றி மேலும் விவரங்கள் தெரிந்துகொள்ள "ஹாமில்டன் கால்கேட் சர்வகலாசாலையில் மதபோத பேராசிரியாக இருந்த மிஸ்டர் "கென்னத் மார்கன் என்கிறவரை" மததேசியக் கௌன்சில் ஸ்தாபனமும்;

கனெக்டிகட்டிலுள்ள எட்வர்ட் கேஸன் பவுண்டேஷன் ஸ்தாபனமும் அனுப்பியிருக்கின்றனர். நமது மத தகவல்களை எல்லாம் சேகரித்து எழுதும் புஸ்தகங்களை அமெரிக்காவில் பாடப்புஸ்தகங்களாக வைக்கவும் இப் புஸ்தகத்தை எழுதுபவர் மேனாட்டினராக இருப்பதை விட "ஹிந்துக்களே இவைகளை எழுதுவதுதான் சிறந்தது என்று அந்நாட்டு சர்க்கார்கள் அபிப்பிராயப் பட்டனர் என்றும், ஹிந்து மதத்தின் பல அம்சங்களை குறித்து பின் கண்ட மேதாவிகளை எழுதச் சொன்னதாக மிஸ்டர் மார்கனே கூறியுள்ளார்:-

அந்நாளில்:- (1) பேராசிரியர் டி. எஸ். சர்மா

(2) சென்னை சர்வகலாசாலை ஸமஸ்கிருத ஆசிரியர் டாக்டர் ஸ்ரீ. வே. ராகவன்.

(3) பூனாசர்வகலாசாலை புரபஸர் ஸ்ரீ. ரீஷிதண்டேகர்.

(4) கல்கத்தா சர்வகலாசாலை புரொபஸர் ஜிதேந்திர பானர்ஜீ.

(5) கல்கத்தா பிரஸிடென்ஸி காலேஜின் மாஜி புரொபஸர் ஸ்ரீ ராதாகோவிந்த பாஸாக்

(6) மற்றொரு புரொபஸர் ஸ்ரீ சிவ பிரசாத் பட்டாச் சாரியார்.

(7) கல்கத்தா சர்வகலாசாலை தத்துவ பேராசிரியர் ஸ்ரீ சதிஸ் சந்திர பானர்ஜி.

இதிலிருந்து அந்நிய நாட்டினருக்கு இருந்த ஓர் ஆர்வம் எப்படிப்பட்டது என்று ஒவ்வொரு ஹிந்துவும் புரிந்து கொண்டு ஹிந்து மதத்தின் தத்துவத்தை உணர வேண்டும்.

கலாச்சாரம் மதம் ஸமஸ்கிருதம் முதலிய கலாச் சாரத்திற்கும் நாகரீகத்திற்கும் அஸ்திவாரமானது. அஸ்திவாரத்தை கண்டிப்பது பழம் தரும் மரத்தின் வேரை துண்டிப்பது ஆகும். அறியாமை, வெறுப்பு மூலம் ஸமஸ்கிருதத்தை அழித்து வருவது அரசியல் தன்னல நோக்கங்களாகும். அரசியல் நோக்கங்களும் தன்னலமும்

"மண் மண்ணுடன் கலந்தது—
சாம்பல் சாம்பலுடன் கலந்தது—
தூசி தூசியுடன் கலந்தது என்று

பைபிளில் உள்ள மந்திரம் ஓதுவது போல் நாமும் இளம் சந்ததிகளும் "தன்னலத்தை" உதாசினம் செய்து விட்டு ஹிந்து என்ற கட்டுபாட்டுடன் செயல் புரிய எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

நம் தேசத்தில் ஜனங்களுக்குள் வேற்றுமை அதிகரித்து விட்டது. இதனால் மதத்தை ஒழிக்க வேண்டும் என்பது அறியாமையே. மத பேதமானது ஓரளவுக்கு சச்சரவுக்கு காரணமாயிருப்பது உண்மை. ஆயினும் மதச் சண்டையைக் காட்டிலும் அரசியல் சண்டையில் தான் தீங்கு அதிகம் என்பது யாவரும் அறிந்ததே. அரசியல் கட்சிகளின் பேதத்தால் ஏற்படும் குழப்பமே அதிகம்.

மதம் என்பது சண்டைக்காக ஏற்பட்டதல்ல அதை அறியாமையால் குழப்பத்திற்கு உள்ளாக்குகின்றனர். ஆகவே மக்களை நல்வழி படுத்தி மதத்தை காத்து அதற்கான திட்டங்களை வகுத்து செயல் பட வேண்டியது இம்மாநாட்டின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

சச்சரவு ஏற்பட மதம் காரணம் என்பதற்காக மதத்தை அழிக்கலாமா? அதை நல்வழிக்கு உபயோகித்துக் கொள்ள வேண்டும். மதத்தையோ மற்றதையோ அழிப்பது மூடத்தனம். மத தெய்வ நம்பிக்கையே சச்சரவுக்கு காரணம் என எண்ணுபவர்கள் அரசியலால் விளையும் தீங்கை எண்ணி அதனை மாற்றிக் கொள்கிறார்களா?

பல சச்சரவுகள் அரசியல் கட்சிகளால் ஏற்படுகின்றன இதற்கு மதமா காரணம்? இல்லை அரசியல் தான். தெய்வபக்தி உள்ளவன் எவ்வளவு துன்பத்தை அனுபவித்தாலும் சகித்துக் கொண்டு அந்த மத தெய்வ பக்திதான் ஒரு நல்ல க்ஷேமத்தை கொடுக்க கூடியது என்றும் மாறாக தங்கம், வெள்ளி போன்றவற்றை சேமிப்பது அல்ல என்று கூறி ஆஸ்திகர்கள் ஒன்று படவும் இம்மாதிரியான மாநாடுகள் அவசியமாகவும் உபயோகமானவையாக இருத்தல் வேண்டும் என்பது தான் அடியேன் ஆவல்

"நல்லோர்களின் சேர்க்கையால்
பற்றின்மையும்
பற்றின்மையால் மயங்காமையும்
மயங்காமையால்
ஸ்திரமான ஞானமும் ஸ்திர ஞானத்தால்
முக்தி நிலையும் ஏற்படுகின்றன.

---

ஓது சமயங்கள் பொருள் உணரு நூல்கள்
ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளவல்வும் இவற்றுள்

யாதுசமயம் பொருணூல் யாது இங்கு என்னில்
இதுவாகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி

நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருணூல்

ஆதலினால் இவையெல்லாம் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்.

சிவஞான சித்தியார்.

உலகத்திலுள்ள எல்லா மனிதர்களுக்கும் இனிய விருப்பமும் துன்ப வெறுப்புமே இயற்கையாகக் காணப்படுகின்றன. இவவுலக இன்பங்களெல்லாம் நிலையில்லாத சிற்றின்பமாகவேயிருக்கின்றன. அதனாலேயே பேரின்பத்தை அடைய அறிவுடையோர் கொண்டோழுகும் வழிகளே மதங்களாம்.

# மதபேத காண்டம்

மதமாவது விவேகிகளால் தங்கள் தங்கள் அறிவின் தன்மைக்கேற்ப ஒரு தெய்வத்தையும், ஆசார கிருத்தியங்களையும், நடையுடையாதிகளையும் ஏற்பாடு செய்து அவ்வழியே தத்தமது சார்பினரையும் நடக்க வற்புறுத்தி அதற்கென்று ஒரு நூலியற்றியுமுள்ளார்கள்.

இவைகளில் சில மதங்கள் பூர்விகமாயும், சில மதங்கள் இடையில் தோன்றியதாயும் உள்ளன. இதனுள் சில மதங்கள் விக்கிரகாராதனையோடு கூடியதாயும் சில மதங்கள் ஆராதனை இல்லாததாயும் தெய்வமே யில்லையென்றும், அதிலும் சில மதங்கள் தாங்களே தெய்வமுண்டென்றும் அதன் இலட்சணங்களை பொதுப்பட்ட மக்களுக்குக் கூறாமலே மனம் போனபடியே சாஸ்திரங்களின்றி அனுஷ்டித்து வருகிறார்கள்.

அனேக மதங்கள் சயமச்சின்னங்கள், தியமம், சாஸ்திரம் இல்லாமலும் உள்ளன. உலக மதங்கள் ஆசாரிய நாம ரூபகிரியா பேதங்களால் அனந்த வகைப் பட்டிருக்கின்றன.

மதங்களின் பேதபாவங்களை அளவிட முடியாது.

# மதங்கள் 150

1. அத்துவைதம்
2. விசிட்டாத் துவைதம்
3. சைவம்.
4. சுத்தசைவம்.
5. பேத வாத சைவம்.
6. ஆதிசைவம்.
7. வீரசைவம்.
8. வைணவம்.
9. வரவைணவம்.
10. இராமாநுசம்.
11. மாத்துவாசாரம்.
12. வைதீக வேதாந்தம்.
13. சுத்த வேதாந்தம்.
14. சமணம்.
15. கணுபத்தியம்.
16. கௌமாரம்.
17. பௌத்தம்.
18. புத்தம்.
19. தியாசபிகல்.
20. சாத்தேயம்.
21. சௌராந்திகம்.
22. யேகாசாரம்.
23. மீமாஞ்சம்.
24. ஆத்திகம்
25. நாத்திகம்.
26. கிரகாதிகம்
27. பௌராணிகம்.
28. ஆரங்கம்.
29. மாத்து மீகம்
30. வைபாடிகம்.
31. யோகம்.
32. காளா முகம்.
33. வையாயிகம்.
34. ஆருகதம்.
35. பாசுமதம்.
36. மாவிரதம்.
37. பாடணவாதம்.
38. சாங்கிராந்த வாதம்.
39. அவிகார வாதம்.
40. பரிணும வாதம்.
41. நிரீச்சுர வாதம்.
42. சூனிய வாதம்.
43. சிவசம வாதம்.
44. அச்சுமாரு வாதம்.
45. சிவசம வாதம்.
46. அயிக்க வாதம்
47. அனேகசுர வாதம்.
48. கவுளயாமணே வாதம்.
49. ஆசீவாதம்.
50. சூரியவாதம்.
51. சந்திரவாதம்.
52. அக்கினி வாதம்
53. மாயா வாதம்
54. ககோளவாதி
55. காலவாதி
56. அவிழ்தவாதி
57. ஊழ்வாதி
58. மந்திரவாதி
59. எந்திரவாதி
60. அத்துவாசங்கவாதி
61. தர்க்கவாதி
62. தானசங்கற்பவாதி
63. விரதசங்கற்பவாதி
64. பிரவாஹேஸ்வராதி
65. உபக்கிரமவாதி
66. கிரிடாப்பிரமவாதி
67. சத்தப்பிரமவாதி
68. பிரதிவிம்பவாதி
69. லீலாபிரம்மவாதி
70. சம்மேளிதம்
71. பாசுபதி மதம்
72. சங்கிராந்தி

73. பஞ்சராத்திரம்
74. தார்கீகம்
75. சாங்கியம்
76. வாமம்
77. பைரவம்
78. சுமார்த்தம்
79. இராமந்தம்
80. பஞ்சபூதாத்துமம்
81. இந்திரயாத்துமம்
82. அந்தகரணாத்துமம்
83. பிரணாத்துமம்
84. சிவாத்து விதம்
85. வைசேஷியம்
86. நீரிசுர சாங்கியம்
87. தாந்தோன்றி
88. கபிரேயன்
89. பாஸ்கரியம்
90. பாட்டம்
91. பிரபாமரம்
92. பிரமசமாஜம்
93. பாட்கரம்
94. வல்லபசாரம்
95. சைனியம்
96. சார்வாகமம்
97. சாந்திரம்
98. வேதமாசம்
99. உருத்திரன்
100. பாடாண்டம்
101. மகம்மதியம்
102. பார்சீகம்
103. கிறிஸ்து
104. ரோமன
105. புரோடஸ்டாண்டு
106. பாப்பிஸ்டு
107. சாபிலயன்
108. லண்டன் மிஷன்
109. ஸ்காட்சு மிஷன்
110. வெஸ்லின்
111. ஒயிட் பீல்ட்டிஸ்ட்
112. காலவனிஸ்ட்
113. லூத்தர்
114. ஸ்காந்திநேவியர்
115. பிரிசிபிடேரியன்
116. அண்டிஞேமியனர்
117. யூனிடேிர்யன்
118. சொஸ்னியர்
119. அரியான்
120. எபிஸ்கோபில்
121. குவாகர்
122. பிரமேசன்
123. சுவேதன் பர்கியர்
124. கிரேக்
125. ரோமகர்
126. சீக்கியம்
127. சீனம்
128. எகிப்து
129. யுதேயம்
130. கிரீக்கு
131. மெக்சிகோ
132. ஜப்பான்
133. தார்தார்யா
134. சீயம்
135. கனடா
136. பெருவியன்
137. பைகோ
138. பிலிபியன்
139. மலாகா
140. சுமேத்ராபேர்னியர்
141. ஜாவா
142. மலாயா
143. லாம்லா
144. காங்கோ
145. அரக்கான்
146. மிசிசிபி
147. பிலோரடைன்
148. காரபி
149. கினியான்
150. பெனி

இந்த 150 மதங்களுக்கு, ஆசாரத்தாலும், இடத்தாலும், ஆசாரியராலும், ஜாதியாலும் இவ்விதப் பெயர்கள்மைக்கப் பட்டதாகத் தெரிய வருகிறது. இதில் யாதொரு காரணமின்றி வைராக்கியத்தால் உண்டானதாகவும் ஒரு விதமான ஏற்பாடு மில்லாமல் தோன்றியதாகவும் சில மதங்கள் வரலாறில்லாமல் உள்ளன. காலஅளவில் சில மதங்கள் அழிந்தும் சில நூதன மாகத் தோன்றியும் அனேகம் அநாதியாகவுமிருக்கின்றன.

இவ்வுலகம் அளவில்லாத பெரிய நிலமாயிருப்பதாலும் இதில் வசிப்பவர்கள் எண்ணற்றவர்களாயிருப்பதாலும் இதிலுள்ளவர்களுடைய விவேகம் பல மாதிரியான தோற்ற மாயிருப்பதாலும் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப நடை, உடை பாவனைகளில் வித்தியாசம் உள்ளதினுல் பிறந்த வர்கள் யாவருக்கும் யார் நம்மைப் படைத்தவர்கள், அவர்–களல்லவோ தெய்வமென்னு முணர்ச்சி யிருப்பதாலும் அவரவர் களிஷ்டப்படி ஒவ்வொரு முடியரைட் மதங்கள் அனேகமாயின வல்லாமல் வேறல்ல.

இப் பேதங்கள் ''உயிர்'' நிலையால் வந்த பேதமே தவிர வேறல்ல.

உதாரணம(க ''பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் களில், பதியாகிய கடவுளை, ''இல்லை'' எனக் கூறுவோர், அப் பொருளை அடியோடு இல்லை என மறுக்கின்றனர். ஆனுல் பசு வாகிய உயிரை 'இல்லை' என்போர் அவ்வாறு முற்றிலும் முரன் பட்டுக் கூறுவதில்லை. ஏனெனில், கடவுட் பொருள் உயிரைப் போல உலகில் பெரிதும் தொடர்புபட்டு நில்லாமையால், அதனை இல்லை எனக் கூறுதல் எளிதாகி விடுகின்றது. உயிர் அவ்வா றில்லை. ''உயிர் உள்ளது; உயிர் போயிற்று; உயிர் வந்தது; உயிர் வாழ்கின்றது என்றுற் போல உயிரை உலகின் கண் பல வகையில் தொடர்பு படுத்திக் கூறுதல் இன்றியமையாத தாகின்றது. ஆகவே உயிரை அடியோடு இல்லை என்று சொல் லாமல் ''உயிர் என்பது எது' என்னும் ஆராய்ச்சியில் இன்னது தான் 'உயிர்' எனக் கூறுவதில் தான் மதங்கள் மாறுபடு கின்றன. இம் மாறுபாட்டில் தான் ''மெய் கண்டார்'' பொருந் தாக் கொள்கைகளை மறுப்பதையே உயிருண்மை கூறுவதாக அவரது ''சிவஞான போத மூன்றும் சூத்திரத்துள் விளக்கி யுள்ளார்.

'இன்னதே உயிர், இன்னதே உயிர்' என ஒவ்வொன்றைக் குறித்துக் கூறும் மதங்கள் பலவும் 'உயிர்' என்பதற்குக் கூறும் பொது இலக்கணம். 'அறிவுறுவதால்' என்பதே. எனவே, 'உலகில் அறிவாய் நிற்பது எது' என்பதை உணர்வதே, 'உயிராவது இது' என உணர்வதாகும் என்பது தெளிவு.

## உயிர் எது என்பது :-

எல்லார் கூறுவதையும் 'அன்று அன்று என மறுப்பின், எது தான் உயிர் என்று மெய்கண்டார் கூறுகின்றார். உயிர் எனப்படுவது ஒரு தனி முதல் என்பதனை முதற்கண் பலவாற்றாலும் காட்டினர். பின்னர் ''அறிவுடையது'' என அனைவராலும் உடன்படப்பட்ட அந்தப் பொருள், அறிவே இல்லாத சடப் பொருள்களாகிய பருவுடம்பு, நுண்ணுடம்பு, முதலிய உலகப் பொருள்களுள் ஒன்றும் அன்று; பிறர் அறிவிக்க வேண்டாது தானே எல்லாவற்றையும் இடையறாது அறிந்தும், அறிவித்தும் நிற்பதாகிய பிரமப் பொருளும் அன்று. அறிவித்தால் அறியக் கூடியதும், அறியுமிடத்தும் ஒவ்வொன்றாகவே அறிவதும், அறிவதையும் விட்டு விட்டே அறிவதும், அங்ஙனம் அறியுங்கால் அறியப்பட்ட பொருளில் அழுந்தி அதுவேயாய் நின்று அறிவதும் ஆகிய இயல்பினை உடைய அறிவுப் பொருளே உயர் அல்லது ஆன்மா என்பதே மெய்கண்டார் கூறுவது.

''அன்றன் றெனநின் றனைத்தும்விட்டஞ் செழுத்தாய்
நின்றென் றுளததுவே நீ; அனைத்தும் — நின்றின்று
தற்பணம்போல் காட்டலால் சார்மாயை நீஅல்லை;
தற்பரமும் அல்லைதனி''

''அறிந்தும் அறிவதே யாயும் அறியாது,
அறிந்ததையும் விட்டங் கடங்கி — அறிந்தது
எது? அறிவும் அன்றாகும்; மெய்கண்டான் என்றின்
அது அது தான் என்னும் அகம்''

என்ற வெண்பாக்களை நோக்குக (தர்ப்பணம்-கண்ணாடி) இலைகளை இன்னும் விரிவாக எழுதலாம். ஆனால் மதபேத காண்டம் பற்றி எழுதுவதால் இத்துடன் சுருக்கியுள்ளது.

இப் பேதங்களில் கிறிஸ்து மதத்தில் ஏறக்குறைய இருநூற்றைம்பது உள்ளது.

இதுபோல் ஹிந்து மதத்திலும் உட்சமயங்கள் ஆகம நெறியாகச் சொல்லும் சமயங்கள் :-

| | |
|---|---|
| சாங்கியத்தோடு அட்டவாதம் | 8 |
| பேதமாகவுள்ள சமயம் | 16 |
| அன்றிப் புறச் சமயம் | 3 |
| பாடணமுதலிய சமயம் | 38 |
| பாசாண்ட மதம் | 90 |

இவற்றுள் :- சைவம்; சிவாத்துவிதம்; சம்மேளனம் பாசுபதம்; மாவிரதம்; காளமுகம்; வாமம்; வைரவம் இவைகளே எட்டு சைவம். சைவ பேதமாயுள்ளது ஊற்ற சைவம், அனுதி சைவம், ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேத சைவம், அந்தரசைவம், குணசைவம், நிற்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அவாந்தர சைவம், கிரியா சைவம், சுத்த சைவம், நாலுபாத சைவம், பேதசைவம் என்னும் பதினுறு. அட்டவாதமாவது, சிவசம வாதி, ஐக்கியவாதி, சங்கிரந்தவாதி, பிரவாகேசுரவாதி, கபாலிகவாதி, அவிகாரவாதி, பேதா பேதவாதி, அனேக சுரவாதி என்பது; வேதாங்கீகாரமான வைதிகத்திற் பேத மானது; நியாயம், வைசேடிகம், மீமாஞ்சம், சாங்கியம், வைணவம், பாட்டம், பிரபாகரம், சத்தப் பிரமவாதி, புராணீகன் என்பது.

## புறமதங்கள்

உலகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை, சாங்கியம் என்னும் மதங்கள் கடவுளே ஒப்புக்கொள்ளாத மதங்கள். இவைகளில் உலகாயதமும், மீமாஞ்சையும், தாம் கடவுட் கொள்கையை மறுக்கின்ற மதங்கள் என்பதை வெளிப் படையாக ஒப்புக்கொள்கின்றன.

பௌத்த மதமும், சமணமதமும் கடவுட்கொள்கைத்யை தாம் மறுப்பதாக ஒப்புக்கொள்வதில்லே. அஃதாவது கடவுளுக்கு வேதமதங்கள் சொல்லுகின்ற இலக்கணங்கள் இல்லே, வேறு இலக்கணங்களே உள்ளன என்கின்றன எனவே, வேத மதங்கள் சொல்லுகின்ற வகையான கடவுள் இல்லே, வேறு வகையான கடவுள் தான் இருக்கின்ருர். என்று அம் மதங்கள் கூறுகின்றன என்பதாகின்றது.

பௌத்தமும், சமணமும், உலகம் ஒருவராலும் ஆக்கப் படுவதும் அன்று; அழிக்கப்படுவதும் அன்று. காணப்படும் இந்த உலகமும் கேட்கப்படும் மற்றைய உலகங்களும் அவற்றில் உள்ள நன்மை தீமைகளும் எல்லாம் இயற்கையில் இருந்து கொண்டிருக்கின்றன. அவைகளை முழுதொருங்குணர்ந்து மற்றவர்களுக்குத் தெரிவிப்பவன் தான் கடவுள் அஃதாவது 'நல்லது இது; தீயது இது என்று தெரிவித்து, தீயதின் நீங்கி நல்வழியில் நடக்க வழி காட்டுபவன் தான் கடவுள். அவன் தன்னைப் போற்றுபவரிடத்திலும், தூற்றுபவரிடத்திலும், கருணையே உடையவன், நல்லதற்கு நல்ல பயனையும் தீய தற்கு தீய பயனையும் அவன் கொடுப்பதில்லை. அந்த அந்தச் செயலே அந்த அந்தப் பயனை அவர்களுக்குக் கொடுத்து விடும். ஆகவே, கடவுள் காட்டியவழியில் நடப்பவர்கள், நன்மையையும், அதற்கு மாருக நடப்பவர்கள் தீமையையும் அடைவார்கள் என்கின்றன; அவ்வாருயின் கடவுளை வழிபடு வதனுல் பயன் என்ன? என்ற கேள்வி எழுகின்றது, அதற்கு 'கடவுளை வழிபடுவதே ஒரு நல்ல செயல், அந்த நல்ல செயலும் ஓர் நற்பயனைத்தரும்' என்பது தான் அம்மதங்கள் சொல்லும் விடை.

எனவே, தாய்தந்தை, ஆசான் முதலிய பெரியோர்களை வழிபடுத்துவதற்குப் பயன் உண்டாவது போலக் கடவுளை வழிபட்டாலும் பயன் உண்டு என்பதாகின்றது. மேலும் நல் வழி காட்டியவனை மறத்தல் நன்றி மறத்தல் என்னும் தீய செயலாகும்; அதனின்றும் நீங்குவதற்கும் கடவுளை வழிபடல் வேண்டும் என்பது கருத்து.

இன்னும் இப் புறமதங்கள், பூமியைக் கடவுள் படைக்க வில்லை; கடலைக் கடவுள் படைக்கவில்லை; காற்றைக் கடவுள் படைக்கவில்லை; அவைகளைக் கடவுள் கட்டுப்படுத்தி ஆள் வதும் இல்லை என்று சொல்லிவிட்டு அதே சமயத்தில், அவை களை ஒழுங்காக ஓர் ஆற்றல் இருந்து நடத்துகின்றது. அதனுலேயே நன்மைக்கு நன்மையும் தீமைக்குத் தீமையும் உண்டாகின்றன; அந்த ஆற்றல், அற (தரும) ஆற்றல் என்று சொல்லுகின்றன. இது மிகவும் விநோதமாய் உள்ளது. அற ஆற்றலே நன்மை தீமைகளைத் தருகின்றது' என்று சென்னுல் கடவுளும் அதைத் தன்வழிப்படுத்த முடியாமல், அதன் வழியில் நின்று மற்றவர்களுக்கு வழிகாட்டுபவனுக அன்ருே ஆகின்ருன்? அவ்வாருயின் கடவுளைவிட அற ஆற்றல்

அன்றோ பெரிதாகின்றது? அந்த அற ஆற்றலை அறிவுடைய ஆற்றல் என்று அம்மதங்கள் சொல்லவில்லை. அதனால் அறிவாற்றலைவிட அறிவற்ற சட ஆற்றல் அன்றோ மேலானதாகின்றது? இப்படியெல்லாம் பார்க்கும் பொழுது, இம்மதங்கள் ''கடவுளை, கடவுள்'' என்று சொல்வதெல்லாம், ஏதோ ஒரு நல்வழியில் நின்று, நல்ல பேற்றைப் பெற்ற பெரியவர்களைத் தானே தவிர, கடவுளையன்று என்பது புலனாகும். அதனால் தான், வேதமதங்கள் இம்மதங்களை 'கடவுட் கொள்கை இல்லாத மதங்கள் என்று சொல்கின்றன.

கடவுள் இல்லை என்று சொல்கின்றவர்களில் உலகாயதர் முன் நிற்பவர்கள். இவர்கள் எதையுமே இல்லை என்று ஒரே வழியாகச் சொல்லி விடுகின்றார்கள். அஃதாவது, கடவுள் இல்லை; மறு பிறப்பு இல்லை; புண்ணிய பாவம் இல்லை; சுவர்க்க நரகங்கள் இல்லை; மோட்சம் இல்லை; எதுவுமே இல்லை; என்று சொல்லி விடுகின்றார்கள்.

சாங்கிய மதம் உலகம் அநாதி-என்றும் உள்ளது' என்று சொல்லவில்லை. உலகம் தோன்றும்; நிற்கும்; அழியும் என்று தான் சொல்லுகின்றது. அதனால் பல வகையான சட சக்திகள் நிரம்ப இருக்கின்றன; அவைகள் ஒன்றோடு ஒன்று சேரும் பொழுதும், பிரியும் பொழுதும் பலவகையான மாற்றங்கள் பரிணாமங்கள் உண்டாகின்றன.

அதனால் பொருள்கள் தோன்றுதல், நிற்றல், அழிதல் நிகழ்கின்றன. இஃது இயற்கையாக நிகழக் கூடியது. ஆகையால் உலகத்தை ஒருவன் தோற்றுவித்து, நிறுத்தி, அழிக்கின்றான் என்பதில்லை, ஆகவே கடவுள் என்று ஒரு பொருள் இல்லை என்று கூறுகின்றது.

உலகாயத மதம் என்கிற நாத்திக மதமும் ஏறக்குறையச் சாங்கிய மதம் கூறுவது போலத்தான் கூறுகின்றது.

சாங்கிய மதம், சட சக்திகள் பல ஒன்று கூடுவது, பிரிவது என்பவற்றால் உலகம் தோன்றுகின்றது, அழிகின்றது, என்கின்றது. உலகாயத மதம் பூதங்கள் ஒன்று சேர்வதனாலும், பிரிவதனாலும் உலகம் தோன்றுகின்றது, அழிகின்றது என்கின்றது. எனவே, முத்தொழிலிற்கும் முதல்வனாகிய பதி அல்லது கடவுள் ஒருவன் இருக்கிறான் என்பதை நிலைநாட்ட வேண்டுமாயின் உலகத்தின் தன்மையைப் பற்றியே முதலில் அறியவேண்டும்.

அஃதாவது, உலகம் என்றும் உள்ள பொருளா? அல்லது ஒருகாலத்தில் தோன்றி, ஒருகாலத்தில் நின்று. ஒருகாலத்தில் அழியும் பொருளா? ஒவ்வொரு கால வேறுபாட்டில் தோன்றி நின்று அழிவதே யாயினும், தானே தோன்றி நின்று அழிவதா? அல்லது ஒருவன் தோற்றுவித்து, நிறுத்தி, அழிக்க அவ்வாறு வதா? என்று இத்தன்மைகளை முதலில் ஆராய்தல் வேண்டும். இந்த ஆராய்ச்சியைத்தான் மெய்கண்டார் தமது முதற் சூத்திரத்தில் ''அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு'' என்பதை உலகத்தின் தன்மையைக் கூறுவதன் மூலமே வலியுறுத்துகின்றார்.

நாத்திக மதத்தினர் போற்றும் திருவள்ளுவரும் ''கடவுள் உண்டு என்பதை உலகத்தின் தன்மையைக் கூறுவதன் மூலமே உணர்த்தியுள்ளார். அக் குறளின் உரையில் பரிமேலழகரும், காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கட்வுட்கு உண்மை கூற வேண்டுதலின் ஆதிபகவன் "முதற்றே உலகு' என உலகின் மேல் வைத்து ஓதினர், என உரைத்திருத்தல் காணலாம். ஆகவே, மெய்கண்டாரும் அம் முறையிலேதான் கடவுள் உண்மையை வலியுறுத்துகின்றார்.

மீமாஞ்சகர் கூறுவது : உலகாயத மதம் கூறிய விவாதம் பொருந்தாது. ஏனெனில் சில பொருள்கள் தோன்றியழிவதைக் கொண்டு உலகமும் தோன்றியழியும் எனக் கூறுதல், காட்சியளவையும் அன்று; அநுமான அளவையும் அன்று, என்பர் அம்மதத்தினர். ஆகவே அநுமான அளவை அவர்கட்கு உடன் பாடாகலின், அம் முறையிலே அவர்கள் கூறும் தடையை விடுக்கின்றார்.



# ஹிந்து மதம்

மனித இனம் இறைவனே அடைவதற்குரிய நல்ல வழிகளைக் காட்டுவது எதுவோ அது சமயம். வேதாந்த நெறியில் அறிவுத் துறையில் வகுக்கப்பட்டதைச் சித்தாந்தம் என்றும், வழிபடும் கடவுள் பெயரால் அமைக்கப்பட்டதை "சமயம்" எனவும் பிரித்துக் கூறலாம்.

இந்து மதம் ஒரு குறிப்பிட்ட பெரியோரால் தோற்றுவிக்கப்படாதது. அநாதியாக இருந்து வருகிறது. வேதத்தின் நெறி கொண்டு பின்பற்றப்படுவது. அதனுல் இது ஒரு "சனுதன மதமாகும்". சனுதனம் என்ருல் பழமை எனப்பொருள். இதன் பழமையும், சீரிய நெறியுமே இதன் சிறப்புக்குக் காரணம். இந்து என்ற சொல்லிற்கு 'பிறர் துன்புற்ற காலத்து இரக்கமுள்ளவனே "இந்து" எனப்படுவான் எனச் சிலர் பொருள் கூறினுர்கள். புராணங்களில் இச் சொல்லே "ஹிண்டு" என்ற சொல்லால் அழைக்கப் படுவதாகக் கொண்டு எவன் என்றும் உலக இயல்களில் பற்றை விட்டு எப்பொழுதும் மறுமைப் பாதையில் நாட்டம் கொண்டிருக்கிருனே அவனே "ஹிண்டு" எனப்படுவான், என்றும் சிலர் பொருள் உரைத்தனர். நமக்கு "ஹிந்து" என அன்னியர் கொடுத்த பெயராகும். இந்து மதம் என்பதைப் பெரியோர்கள் ஸனுதன மதம், வைதிக மதம் எனவே அழைப்பர்.

ஹிந்து தர்மம் வேதத்தை ஆசிரயித்தது. வேதமோ ஒவ்வொரு ஸ்ருஷ்டி காலத்தும் ஈசுவரனுடைய அநுக்ரஹத்திஞல் ப்ரஹ்மாவின் மூலமாக உலகங்களுடன் கூடவே தோன்றி ஒவ்வொரு பிரளய காலத்திலும் ஈசனிடம் அவற்றுடனே கூடவே ஒடுங்கும். ஆதலின் வேதமும் அதைச் சார்ந்த நமது தர்மமும் ஆநாதியாயுள்ளது, சாசுவதமானது.

உலகத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிராணிகளிடத்தில் ஈசுவரன் பூர்ணப் பிரியமும் கருணையுமுடையவராதலால் இப்பிராணிகள் கெட்ட வழியில் சென்று கஷ்டங்களுக்குப் பாத்திரமாகா வண்ணம் அவர்கள் ஒரு ஜன்மத்தில் மாத்திரமல்லாது எல்லா ஜன்மங்களிலும் க்ஷேமத்தையும் கடைசியாக ஈசுவர ஸ்வரூபமான மோக்ஷத்தையும் அடைவதற்கு வேண்டிய வழியாக தர்மத்தை வேத மூலமாய் உபதேசித்தருளியிருக்கிறார். நமது புத்தி யுக்தியோ ஒரு ஜன்மத்தில் ஸம்பாதிக்க வேண்டிய ஸௌக்யத்தைக்கூட எவ்வளவு யத்தினித்தும் ஸம்பாதிக்க சக்தியற்று கஷ்டப்படுகிறது. எல்லாமறிந்த ஈசுவரனுடைய சட்டமான தர்மத்தை விட்டு ஒவ்வொரு நாள் ஒவ்வொரு விதம் தோன்றுவதும் அற்பங்கூட அறியாததுமான சொந்த யுக்திப்படி தோன்றியவாறு நாம் நடக்கத் தலைப்பட்டு நாமிப்பொழுதநுபவித்து வரும் கஷ்டங்களோடு இன்னும் நரகமென்னும் மகா கஷ்டங்கள் நம்மை யணுகா வண்ணம் ஈசுவரன் நமக்கு மகரிஷிகள் மூலமாய் வேதங்களையும், அதன் மூலமாய் நாம் மோக்ஷத்தையடையும், தர்மங்களையும், அநுக்ர ஹித்திருக்கிறார்.

இத் தர்மமானது ஸாமன்ய தர்மம்; விசேஷ தர்மம் என இரண்டாக ஏற்பட்டது.

மானிடப் பிறவியை அடைந்தவர்கள் எல்லோரும் பொதுவாய் அநுஷ்டிக்கத்தக்க தர்மங்கள் ஸாமான்ய தர்மங்கள்.

அஹிம்ஸை; ஸத்யம்; திருடாமை; சரீரசுத்தி; இந்திரிய நிக்ரஹம், இவையைந்தும் பிரதானமான ஸாமான்ய தர்மங்கள். இவற்றுள் துரோகமின்மை, துன்மார்க்கமின்மை, கோபமின்மை, கபடமின்மை; பகிர்ந்து கொடுத்தல்; பூததயை; ஈசுவர பக்தி; நன்றி யறிதல் முதலியவையுமடங்கும். விசேஷ தர்மம் என்பது ஒவ்வொரு வர்ணங்களிற் பிறந்தவர்களும் தத்தம்

வர்ணங்களுக்கு விதித்தவாறு அநுஷ்டிக்க வேண்டிய சிறப்பு தர்மங்களாகும்.

ப்ரஹ்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர வர்ணங்களென நால்வகைப்படும். ஈசுவரன் மானிடர்களை ஸ்ருஷ்டிக்கும் போது, அந்தந்த ஜீவராசிகளின் பூர்வ வாஸனுபக்குவத்தையனுஸரித்து அவரவர்களுக்கு க்ஷேமகரமான தர்மத்தையனுஷ்டிக்கும் படிக்கே நான்கு வர்ணங்களாக ஸ்ருஷ்டித்தார்.

மேலும் பிரஹ்மா தனது முகம், புஜங்கள், துடைகள், பாதங்களினின்றும் மேற்கூறிய நான்கு வர்ணங்களையும் படைத்ததாக வேதம் கூறியது. அத்தியயனத்தினுல் வேதஸம் ரக்ஷணைக்கு முக சக்தியும், யுத்த சக்தியினுல் பூமியை யடக்கியாள பாகு பலமும், ஸஞ்சரித்து வியாபாரம் செய்யத்துடை பலமும் மற்ற மூன்றையும் வகித்துத் தாங்க பாத சக்தியும் அவசியம் என்னும் கருத்தினுற் போலும்.

வர்ணங்களில் ஒவ்வொருவரும் பிறர் தர்மத்தைக் கைக்கொள்ளாது தத்தம் கட்டளைகளை மாத்திரம் வழுவாது நடத்திவரின் எல்லோரும் ஈசனது அநுக்ரஹத்திற்கு ஸமமான பாத்திரர்களாகின்றனர்.

ஈசுவரன் படைத்த நான்கு வர்ணங்களைத் தவிர, எவ்வளவோ, ஜாதிகளும், ஜனங்களும் காணப்படுகின்றதற்குக் காரணம்; ஸ்ருஷ்டிகாலம் முதல் எவ்வளவோ கோடிக்கணக்கான வருஷங்கள் ஆகியிருப்பதால் மத்ய காலத்தில் நான்கு வர்ணத்தார்களில் சுயதர்மங்களைக் கைவிட்டவர்களும், தத்தம் வர்ணங்களுக்குரிய விவாகத்தை விட்டு பாபத்துக் கேதுவான விவாகங்களைச் செய்து அதினுலுண்டாகும் ஸந்ததிகளும் ஓர் வர்ணத்திலும் சேர்க்கத்தகாத ஸங்கர ஜாதிகள் ஆனுர்கள். இந்த ஸங்கர ஜாதிகளுக்குள்ளும் ஒன்றுக்கொன்று கலந்து எண்ணிறந்த ஜாதிகள் ஏற்பட்டிருப்பதாக

சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவர்களெல்லாம் உலக முழுவதும் பரவி நிற்கின்றனர். பொது தர்மங்களில் இவர்களனைவரும் அதிகாரிகள்தான். வேதங்கள்; ரிக்; யஜுர்; ஸாமம்; அதர்வணம் ஆக நான்கு வேதங்கள். இவைகளுக்கு சாகைகள் உண்டு. ரிக் வேதத்திற்கு இருபத்தொன்றும் யஜுஸ்ஸுக்கு நூற்றொன்றும்; சாமத்திற்கு ஆயிரமும்; அதர்வணத்திற்கு ஒன்பதுமாம். இச் சாகைகளுக்கு கர்மகாண்டம்; ஞான காண்டமென்பது.

கர்மகாண்டமானது நமது புத்திக் கெட்டாத புண்ணிய லோகங்களையும் சித்த சுத்தியையும் கர்ம யோகத்தையும் உபதேசிக்கிறது. இவ்விதம் கர்ம யோகத்தினல் சுத்தியடைந்த ஆன்மாவுக்கு ஞான யோகத்தினல் மோக்ஷத்தையளிக்கும் உபநிஷத்துகள் என்ற வேதத்தின் முடிவான பாகத்திற்கு ஞான காண்டம் என்று பெயர்.

இவ் வேதங்களில் உபவேதங்கள்; ஆயுர் வேதம்; தனுர் வேதம்; காந்தர்வ வேதம்; அர்த்த சாஸ்திரம் என்பது.

இவற்றுள் ஆயுர்வேதம் தர்மா நுஷ்டானத்திற்கு முதல் ஸாதனமான சரீரத்தை ரோகங்கள் பீடிக்கா வண்ணம் காப்பாற்றவும், தபஸுக்காக ஆயிரக்கணக்கான வருஷங்கள் ஜீவிக்கவும், உபாயங்களைக் கற்பிக்கும் சாஸ்திரம். இது பிரஹ்மா, பிரஜாபதி, அசுவினி தேவதைகள்; தன்வந்திரி; இந்திரன்; பரத்துவாஜர்; ஆத்ரேயர்; அக்தி வேசியர் இவர்களால் உபதேசிக்கப் பட்டு சரகமுனிவரால் ஸங்கிரகிக்கப் பட்டிருக்கிறது. இது ஸூத்ரம்; சாரீரம், ஐந்தீரியம்; சிகித்ஸா; நிதானம்; விகற்பம்; ஸித்தி என்று ஏழு ஸ்தானங்களுள்ளது. தற்காலத்தில் வழங்கப்படும் சரீர தத்துவ சாஸ்திரம்; ஒஷதி தத்துவ சாஸ்திரம் ரஸாயன சாஸ்திரம் சஸ்திரசிகித்ஸை

ஔஷத சிகித்ஸை முதலியவைகள் இந்த ஆயுர் வேதத்தின் எட்டு ஸ்தானங்களின் பகுதிகளாம். தநுர்வேதம்; தர்மாநுஷ்டானத்திற்கு துஷ்டர்களால் கெடுதி நேரா வண்ணம் க்ஷத்ரியர்களது தர்மமான யுத்தத்தை நடத்தவும், பிரஜைகளை சரியாய்ப் பரிபாலனம் செய்யவும் சக்தியைக் கொடுக்கும் வேதமாகும். இது விசுவாமித்ர மகர்ஷியால் செய்யப்பட்டது. இது தீக்ஷாபாதம்; ஸங்கிரகபாதம் ஸித்திபாதம்; பிரயோக பாதம் என நான்கு பாதங்களடங்கியது. இந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஆயுதங்கள் முக்தம், அமுக்தம்; முக்தாமுக்தம்; யந்திர முக்தம்; என நான்கு வகை. இதில் முக்தமாவது, சக்ராயுதம்; அஸ்திரம் முதலியது. அமுக்தம்; கத்தி; கதை; முக்தாமுக்தம்; விட்டெறிந்தாலும் சத்துருவையழித்து தானே திரும்பி வந்து சேரும். சல்லிய வேதம் என்னும் ஆயுதங்கள், யந்திர முக்தமாவது; அம்பு; சதக்னி; முதலான பீரங்கிக் குண்டுகள்.

முக்தமாகிய அஸ்திரங்கள்; பிரம்மாஸ்திரம்; நாராயணாஸ்திரம்;; பாசுபதாஸ்திரம்; பிரஜாபத்யாஸ்திரம்; ஆக்நேயாஸ்திரம்; வாருணாஸ்திரம்; வாய்வ்யாஸ்திரம். தீக்ஷையால் ஸங்கிரகிக்கப்பட்டு ஸித்தி செய்து கொண்டு பிரயோகிக்கத்தக்கவைகள். பிரயோக பாதத்தில் ஸேனைகளின் வ்யூஹம் முதலிய யுத்த முறைகள் தனுர் வேதத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன.

கந்தர்வ சாஸ்திரம் என்பது ஈசுவரனை மகிழ்ந்து கொண்டாடி சித்தத்தை நிலையில் நிறுத்த ஆரம்பிக்கும் சுலபமான ஸாதனம். இது பரத முனிவரால் செய்யப்பட்டது.

இது கானம் வாத்தியம்; நாட்டியம் என பல பிரிவுகளுள்ளது. இதையறிந்து யாவரும் சந்தோஷிக்கலாம்.

அரத்த சாஸ்திரம் என்பது பிரஜைகளைப் பரிபாலிக்க வேண்டிய நீதிகளும் ராஜ்யத்தை ரக்ஷிக்க வேண்டிய தந்திரங்களும் தர்மத்திற்கு ஸாதனமான பலவித பொருள்களைத் தேடும் மார்க்கங்களும், நகரங்கள், ஆலயங்கள், அரண்கள், பாலங்கள் முதலியவைகளை நிருமிப்பதற்குரிய சிற்பங்களும்; ராஜாங்கத்துக்குரிய கஜம்; அசுவம்; நவரத்னம் முதலியவைகளின் லக்ஷணங்களும் அடங்கிய சாஸ்திரமாகும். இதன் ஒவ்வொரு பாகங்களும் பற்பல ரிஷிகளால் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. சிக்ஷை; கல்பஸூத்ரம்; வியாகரணம்; நிருக்தம்; ஜ்யோதிஷம்; சந்தஸ்ஸு என்ற ஆறு அங்கங்கள் உள்ளன. இது போல் வேதத்தில் உபாங்கங்கள் என்று புராணம்; நியாய சாஸ்திரம் மீமாம்ஸை; தர்மசாஸ்திரம் உள்ளன. புராணங்கள் பதினெட்டு அவற்றில் பிராம்மம் என்பது 10,000 கிரந்தங்கள் கொண்டது பாத்மம் 55,000 கிரந்தம்; வைஷ்ணவம் 23,000 கிரந்தம்; சைவம் 24,000 பாகவதம் 18,000, நாரதீயம் 25,000; மார்க்கண்டேயம் 6,000. ஆக்நேயம் 15,400; பவிஷ்யம்; 14,500, பிரம்மவைவர்த்தம் 18,000, லிங்கம் 11,000, வாராஹம் 24,000 ஸ்காந்தம் 81,100; வாமநம் 10,000; கௌர்மம் 17,00, மாத்ஸ்யம் 14,000; காருடம் 19,000, ப்ரஹ்மாண்டம் 12,000; எனப் பதினென் புராணங்களும் சேர்ந்து நான்கு லக்ஷம் கிரந்தங்கள். (ஒரு கிரந்தமென்பது முப்பத்திரண்டு அக்ஷரங்களடங்கிய ஒரு சுலோகத்திற்குப் பெயர்.) லக்ஷம் கிரந்தங்களுள்ள மஹாபாரதமும்; 24,000 கிரந்தம் ராம்ாயாணமும்; இதிஹாஸங்களில் சேர்ந்தவை. இவைகளெல்லாம் வேதார்த்தங்களைத் தெள்ளென விளக்கும் பிரமாண நூல்கள். இப் புராணங்களை விரிவாகக் கூறியவர் வியாஸ முனிவர்.

பதினெட்டு புராணங்களுக்கும் பதினெட்டு உப புராணங்கள் ஏற்பட்டுள்ளன.

கணபதியின் உபாஸனையை காணபத புராணங்களும்; தந்திரங்களும்; குமாரஸ்வாமி உபாஸனையை சங்கர ஸம்ஹிதை முதலான புராணங்களும், ஸூர்யோபாஸனையை ஸௌர புராணமும் கூறுகின்றன.

விஷ்ணுவின் உபாஸனையை விஷ்ணு புராணங்களும் பாஞ்சராத்ரமெனும் ஆகமமும் கூறுகின்றன.

சிவபெருமானுடைய உபாசனையை இதிஹாசமான சிவரகஸ்யமும் சிவ புராணங்கள் பத்தும், காமிகம் முதலிய இருபத்தெட்டு சிவாகமங்களும் கூறுகின்றன.

அம்பிகை உபாசனையை தேவி பாகவதம் முதலிய புராணங்களும்; அறுபத்து நான்கு சக்தி தந்திரங்களும் கூறுகின்றன.

## ஹிந்து சமயத்தின் மூன்று சித்தாந்தங்கள் :-

ஹிந்து மதமானது, அத்வைதம்; விசிஷ்டாத்வைதம்; த்வைதம்; என்ற மூன்று சித்தாந்தங்களைக் கொண்டுள்ளது.

1. அத்வைதத்தை ஸ்ரீ சங்கரரும்;
2. விசிஷ்டாத்வைத்தை ஸ்ரீ இராமநுஜரும்;
3. த்வைதத்தை ஸ்ரீ மத்வரும் உபதேசித்தார்கள்.

## 1. "அத்வைத சித்தாந்தம்"

அத்வைத மார்க்கம் ஆதி சங்கரருக்கும் முன் கி. பி. 788–820 இல் இருந்ததாக அன்னாரது பிரம்ம சூத்ர மகா பாஷ்யத்திலிருந்து அறியப்படுகிறது.

ஸ்ரீ ஆதி சங்கரர் உபநிஷத்துக்களிலுள்ள சில அபேத சுருதிகளை மட்டும், அதாவது ஒரு தத்துவமே உண்டு என்று ஒதுகிற சுருதிதகயே முக்கியமாக எடுத்துக் கொண்டார். அவர் சித்தாந்தப்படி "சித்" என்கிற ஜீவாத்மாக்கள் 'அசித்'

என்கிற உலகப் பொருள்கள் ஈஸ்வரன் என்கிற பரமாத்மா இவைகளில் ஈஸ்வரன் ஒருவன்தான் உண்மைப் பொருள். அவனுடைய பிரதி பிம்பங்கள் தான் ஜீவாத்மாக்களும் பிரதி உலகப் படைப்புக்களும், இவ்விரண்டும் உண்மை போல் தோன்றுவது ''மாயை'' அல்லது 'அஞ்ஞானத்தால்' ஈசுவர பக்தி பண்ணி, அவனைப் போய் அடைந்த மாத்திரத்தில் அந்த பரமாத்மா ஸ்வரூபத்தோடு ஜீவாத்மாக்களாகிய நாம் கலந்து போய் விடுகிறோம். நாம் வேறு அவர் வேறு என்ற பேதம் இலலாமல் இரண்டறக் கலப்பது தான் ''ஆனந்தம்'', இந்த இரண்டறக் கலத்தல் தான் ''அத்வைத சித்தாந்தம்''

விசிஷ்டாத்வைத சித்தாந்தம் :—

ஸ்ரீஇராமனுஜருக்கு முன் பிற மதஸ்தர்கள் யாவரும் தங்கள் தங்கள் கொள்கைகளுக்கு அனுகூல மான வகையில் வேத வாக்கியங்களுக்கு வலிந்து பொருள் கூறினர். ஆகவே வேதாந்த மதமானது, அத்வைதம், த்வைதம்; சுத்த அத்வைதம்; விசிஷ்டாத்-வைதம் என இப்படிப் பலவாருக அந்தந்த சித்தாந்-தத்தைத் தழுவும் ஆசாரியர்களால் வகுக்கப்பட்டிருந்-தது.

மேற்கூறிய இத்தனை மதங்களைக் காட்டிலும் விசிஷ்டாத்வைத சித்தாந்தமே மேற்பட்டது என்று ஸ்ரீஇராமானுஜர் சுருதி முதலிய பிரமாணங்களைக் கொண்டு நிலைநாட்டினுர். இவருடைய தத்துவம் உலகில் ஒரு வஸ்துவைப் பலவென்றும், ஒன்றே என் றும் சொல்வதற்குப் பொருத்தமுண்டு. உதாரணமாக ஒரு கடியாரத்தில் பல உறுப்புக்கள் சேர்ந்திருப்பது புலப்படாமற் போகாது, ஆயினும் 'கடிகாரம்' என்பது ஒரே பொருள். வேதத்தில் சொல்லிய பேத சுருதி-களைப் பார்க்குங்கால் ''சித்'' என்கிற ஜீவாத்மாக்-களும், ''அசித்'' என்ற உலகப் பொருள்களும் ''ஈஸ்வரன் என்ற'' பரமாத்மாவும் உண்மைப் பொருள் கள் தான். அபேத சுருதிகளை ஆராய்ந்தால், ஜீவாத் மாக்களையும், உலகப் பொருள்களையும் சரீரமாகக்

கொண்ட பரம்பொருள் ஒன்றே என்ற உண்மை வெளியாகும் இப்படி இரண்டு மாறுபட்ட சுருதி வாக்கியங்களின் பொருளைப் பொருத்திக் காட்டி சமரஸப் படுத்துவதே ''விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் முழு முதற் கொள்கை.

ஜீவாத்மாக்களாகிய நாம் பக்தி செய்தும் சரணுகதியாலும் பரம்பொருளாகிய ஈஸ்வரனுடன் கலந்து விடுகிறோம்; ஆனாலும் தண்ணீரில் பாலைக் கலந்தால் பால் எப்படி அங்கு இருந்துதான் தீருமோ அதே போல் நாம் அவரோடு கலந்தாலும் முழுவதும் தனித்துத்தான் இருக்கிறோம். இது தான் இராமனுஜரின் சித்தாந்தம்.

**த்வைத சித்தாந்தம் :—**

ஸ்ரீஆனந்த தீர்த்த ஸ்வாமிகளின் ''பலதத்துவங்கள் உண்டு'' என்ற பேத சுருதிகளை (ஆதாரமாகக் கொண்டு த்வைத) சித்தாந்தத்தைத் தோற்றுவித்தார்.

அவர் கொள்கைப்படி; ஜீவாத்மாக்களாகிய நாம் முழுவதும் ஈசுவரனில் கலந்து விட்டால். எப்படி ஆனந்தத்தை நாம் அனுபவிக்க முடியும்? ஆகவே ஈசுவரனைப் போய் அடையும் போது, நாம் வேருகத் தான் இருக்கவேண்டும். ஆனந்தத்தைக் கொடுக்க கூடியவர் அவர் என்ருல் அவ்வானந்தத்தை அனுபவிக்க நாம் தனியாகத்தான் அங்கு இருக்கமுடியும் என்கிருர். இது தான் ''ஜீவன் வேறு'' ''பரமன் வேறு'' என்னும் த்வைத சித்தாந்தம்.

## வைஷ்ணவம்

வந்தே வைகுண்ட ஸேனுன்யம்
தேவம் ஸூத்ரவ தீலகம்

யத்வே த்ரசிகரஸ் பந்தே
விச்வமேத த்வ்யஸ்வதிகம்
... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ...

(பொருள்) வைகுண்டத்திலுள்ள படைத் தலைவனும், ஸூத்ரவதீ தேவியின் கணவரும் எவரது கையிலுள்ள தண்டம் அசையும் போதே உலகம் நிலைபெற்று விடுகிறதோ, அவ்வித சக்தியையுடைய ஸ்ரீவிஷ்வக்ஸேனரை வணங்குகிறேன்.)

# விசிஷ்டாத்வைதம்

ஸ்ரீய: பதியான ஸ்ரீமந் நாராயணனாலே ப்ரவர்த்திக்கப்பட்டது. ஆகவே ''லக்ஷ்மிநாத ஸமாரம்பாம்'' என்று கூறுவார்கள். பகவான் வேதத்தை வெளியிட்டார், ஆகையினால் இது அபௌருஷேயம் என்று சொல்லப்படுகிறது. வேதத்தினால் திருத்தமுடியாத உலகத்தை தானே அவதரித்து ராம, கிருஷ்ணாதிகள் அவதாரத்தினால் திருத்த முயன்றான். அதனாலும் திருந்தாத உலகத்தை அடியார்களை அவதரிக்கச் செய்து திருத்த எண்ணினார். அவர்களையே ஆழ்வார்கள் என்று கொண்டாடுகிறார்கள். இவர்கள் அவதாரத்தை அபிநவ தசாவதாரம் என்று ஸ்வாமி தேசிகன் குறிப்பிட்டார். இவர்கள் வேதங்களை, மேகம் பருகின, ஸமுத்ராம்பு போலே, எளிய, இனிய தமிழ்பாஷையிலே அனைவரும் அதிகரிக்கலாம்படி வேதார்த்தங்களை வெளியிட்டார்கள். இதையே தமிழ் வேதமென்று பெரியோர்கள் கொண்டாடுகிறார்கள். இவர்களால் பாடப்பட்ட திருப்பதிகள் 108. இத் திருப்பதிகளில் திருமால் வழிபாடு இரண்டு ஆகம முறைகளைத் தழுவியிருக்கிறது.

ஒன்று ''ஸ்ரீ பாஞ்சராத்ரம்'' மற்றொன்று வைகாநஸம். பகவான் ஐந்து இரவுகளில் தன்னை

ஆராதிக்கும் முறையே; அநந்தன், விஷ்வக்ஸேநர், மஹாலக்ஷ்மி, ருத்ரன், முதலியவர்களுக்கு வெளியிட்டார். இத்தகைய முறையைத் தழுவியது, ஸ்ரீரங்கம், பெருமாள் கோவில் என்ற காஞ்சீபுரம் முதலிய திருப்பதிகள். பகவான் நகத்திலிருந்து பிறந்தவர் விகநஸரிஷி. இவர் பகவான் ஆராதன வழிபாடுகளை, மரீசி; அத்ரி; ப்ருகு முதலிய மகரிஷிகளுக்குத் தெரிவித்தார். இதுவே வைகாநஸ ஆராதனக்ரமம். இம் முறையிலிருப்பது, திருப்பதி; உப்பலியப்பன் கோவில்; ஸ்ரீவில்லிபுத்தூர்; திருமாலிருஞ்சோலை முதலிய ஸ்தலங்கள்.

ஆழ்வார்கள் காலத்திற்குப் பின் அவர்கள் வழிக்குரவர்களாக ஆசார்யர்கள் அவதாரம் செய்தார்கள். அவர்களில் தலைமை பெற்று விளங்கக் கூடியவராக, வீரநாராயண புரத்தில் அவதரித்தார் நாதமுனிகள். இவர் ஆழ்வார் திருநகரிக்குச் சென்று நம்மாழ்வாரிடமிருந்து யோக தசையில் 4000 திவ்ய ப்ரபந்தத்தைப் பெற்றவர். ஆகவே இவர் தாளம் வழங்கி தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல் என்று போற்றப்படுகிறார்.

இவ்வாசாரியன் வழித் தோன்றலாக ஸ்ரீவைஷ்ணவதர்ஸன ஸ்தாபகராக சுமார் 900 வருடங்களுக்கு முன் அவதரித்தவர் ''இராமநூஜர்''. இவராலே விஸிஷ்டாத்வைதம் தழைத்து ஓங்கியது. இவர் உயிர் உள்ள பொருள்கள், உயிர் இல்லாத பொருள்கள் எல்லாம் பகவானுக்கு சரீரம். பகவான் இவைகளுக்கு ஆத்மா என்கிற சரீர ஆத்ம பாவ தத்துவத்தை விளக்கி அருளியவர். இவர் திருவரங்கம், பெரிய கோவில் மற்றும் பல திருப்பதிகளைத் திருத்திப் பணிகொண்டவர். இவராலே அருளிச் செய்யப்பட்ட க்ரந்தத்தை ஸரஸ்வதீதேவி கண்டு உகந்ததினால் ஸ்ரீபாஷ்யம் என்று பெயர் சூட்டப்பட்டது. அதனால் இவருக்கு ஸ்ரீபாஷ்யகாரர் என்ற பெயர் வந்தது.

இவருக்குப் பின் இரு பிரிவாக சம்பரதாயங்கள் பிரிந்தன. ஒன்று ஸ்ரீபாஷ்ய பரம்பரையைத் தழுவியது, மற்றொன்று பகவத் விஷயத்தைத் (திருவாய்மொழி) தழுவியது. ஆகவே பகவானே தத்துவம், அவன் திருவடிகளில் பண்ணும் சரணாகதியே ஹிதம், அவருடைய உகப்புக்காக செய்யும் கைங்கர்யங்களே புருஷார்த்தம் என்று அறுதியிட்டார்கள். ஆக ஆகமப் பிரிவுகள் இரண்டும் சம்ப்ரதாய பிரிவுகள் இரண்டும் சொல்லப்பட்டன.

பாஷ்யங்களில் முக்யமாக அத்வைதம்; விசிஷ்டாத்வைதம், ஆகிய இவைகளில் எதேனும் ஒன்றை வேட்பவர்களாய் உபாசிக்கின்றனர், என்பதை கீதையில் :—

''ஞான யக்ஞேந சாப்யன்யே—
யஜந்தோ மாமுபாசதே!
ஏகத்வேன ப்ருதக்த்வேன
பஹுதா விச்வதோமுகம்!

என்று அருளிச் செய்தார்.

(ஏகத்வேன) என்பதால் அத்வைதமும் (ப்ருதக்த்வேன) என்பதால் த்வைதமும் (விச்வதோமுகம்) என்பதால் விசிஷ்டாத்வைதமும் சொல்லப்படுகிறது. வைஷ்ணவர்களை பரமைகாந்திகள் என்றும் சொல்வார்கள். இதற்குக் காரணம் ஏகாந்திகள் என்றால் ஒன்றையே விரும்புகிறவர்கள் எனப்பொருள். அதாவது மோக்ஷத்தையே விரும்புகிறவர்கள். அம்மோக்ஷத்தையும் ஸ்ரீமந்நாராயணனையே வழிபட்டு அடைய விரும்புகிறார்களாதலால் முதற்பதமாக ''பரம்'' என்ற சொல் சேர்ந்தது, ஆகவே பரம+ஏகாந்திகள் என்ற இரு சொற்கள் சேரவே ''பரமைகாந்திகள்'' என இவர்களை அழைக்கிறார்கள். மோக்ஷம் என்ற பேரின்ப வீட்டை அருள நாராயணன் ஒருவரால் தான் இயலும் என்பது இவர்கள் கொள்கை. இவர்கள் மதத்தின் கோட்பாடுகள் மூன்று. 1. தத்துவம் (உண்மை) ஹிதம் (வழி) புருஷார்த்தம் (அடைய நிற்கும் பயன்) 2. சித் (ஜீவான்மா) அசித் ஜடமான உடல்;

ஈசுவரன் எல்லையற்ற குணநலமும் வடிவழகும் கொண்ட ஸ்ரீமந்நாராயணன்).

3. திரு மந்திரம் (திரு எட்டெழுத்து) மந்திரமாகிய "ஓம் நமோ நாராயணு" என்னும் திருப்பெயர் துவயம் (ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணுய நம:) சரம சுலோகம் கீதையில் 18வது அத்தியாயத்தில் 66வது வரும் "ஸர்வதர்மான் பரித்யஜ்ய" என்ற (ஜபிக்கும்) செய்யுள், இதனை மெய்மைப் பெரு வார்த்தை என்பார்கள். இவைகளை முறையே நாலிரண்டு (8) ஐயைந்து (25) நாலெட்டு (32) எனவும் கூறுவர்.

வைஷ்ணவர்களை "ஐயங்கார்" என்று அழைப்பது :— "திருவிலச்சினை" என்ற ஐந்து அங்கங்களை சமஸ்காரங்களை ஆசாரியனிடமிருந்து பெறுவதால் ஐத்து அங்கங்களைப் பெற்றவர்; இதை ஸமாச்ரயணம் எனவும் சொல்லுவார்கள்.

இந்த தீக்ஷை ஆசாரியனிடமிருந்தே பெறவேண்டியது.

1. திருத் தோள்களில் "சக்கரம்" சங்கு முத்திரை (தீயிலிட்டு பெறுதல்)
2. பன்னிரு திருமண் காப்புக்களை மந்திரத்துடன் உடலில் அணிந்து கொள்ளுதல்.
3. புதியதாக "தாஸ்யநாமம்" என்ற திருப் பெயர் இட்டுக் கொள்ளுதல்.
4. மந்திரோபதேசம் பெறுதல்.
5. திருவாராதனை (பூஜை) பண்ணத் தொடங்குதல் என்பன.

இவைகளை, தாபம்; புண்ட்ரம்; நாமம்; மந்திரம்; யாகம் எனக் கூறுவர். இந்த ஐந்து தீக்ஷை ஆசாரியனிடமிருந்தே பெற்றதால் ஐய்யங்கார் என அழைக்கப்படுகிறுர்கள்.

## வைஷ்ணவர்களின் மூலமந்திரம்

ஸ்ரீமந் நாராயணனே—பதரிகாசிரமம் (இமயம்) என்ற இடத்தில் நான் என்ற தானுகிய சீடனுக்கு உபதேசம் செய்யும் வாயிலாக வெளியிட்டருளினுர்.

இம் மூலமந்திரம் ஆசாரியனிடமிருந்து முறைப்படி உபதேசம் பெற்று, நிச்சலும், முறைப்படி, ஒரு வைணவரால்

ஓத வேண்டிய தலை சிறந்த மந்திரமான ''நாரயண மந்திர'' மாகும். இதில் எட்டெழுத்து (பதம்) உள்ளதால், இதனைத் திருவாஷ்டாக்ஷரம் எனவும் அழைப்பார்கள். இது தந்தைக்கு ஒத்த மந்திரம் என்பர்.

இம் மூலமந்திரத்தின் பொருள் :—

''நம்மை அன்றி அவனில்லை, அவனின்றி நாமில்லை என்பதும் அவனுக்கே ஆட்பட்டு வாழவேண்டும் என்பதும், செய்பவனும், செய்விப்பவனும் அவனே என்பதும் சுருக்க-மான பொருளாகும்.

மூல மந்திரமான ஓம் நமோ நாராயணாய ஓதுவதால் :—

''குலம்தரும், செல்வம் தந்திடும், அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலம் தரம் செய்யும், நீள் விசும்பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலம்தரும், மற்றும்தந்திடும், பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலம்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்
(திருமங்கை ஆழ்வார்)

வைஷ்ணவர்கள் ஆலயங்களை திவ்விய தேசங்கள் என்று அழைப்பார்கள். ஆழ்வார்களால் மங்கள சாஸனம் செய்யப்-பட்ட திருமால் திருப்பதிகளைத் திவ்விய தேசங்கள் என்றும், உகந்தருளின நிலங்கள் எனவும் ; எம்பெருமானிடம் சென்று நம் நலனைக் கோருமல் அவருக்கே பல்லாண்டு பாடுதலாகும் என்பது தான் மங்களா சாஸனம்.

''ஞான தசையிலே ரஷ்ய ரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும். ப்ரேம தசையில் தட்டு தடுமாறி கிடக்கும்'' என்பது பெரியோர் வாக்கு.

வைஷ்ணவ திவ்விய தேசங்கள் அல்லது திருப்பதிகள், புராணப் புகழ்பெற்ற பௌராணிகம்; தானே தோன்றிய சுவயம் வியக்தம்; ரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஆர்ஷம், திவ்விய தேசம்; ஆசாரியர்கள் உகந்தருளின க்ஷேத்திரம் அபிமானத்தலம் உள்பட 108 திவ்விய தேசங்கள்; இதில் திருவரங்கம்; ஸ்ரீமூஷ்ணம்; திருவேங்கடம்; சாளக்கிராமம்;

நைமிசாரணியம்; வானமாமலை; புஷ்கரம்; பத்ரி என 8 சுவயம் வியக்தத்தலங்கள்.

பாக்கியுள்ள பிரிவுகள் :—

| | | | | |
|---|---|---|---|---|
| 40 | ஸ்தலங்கள் | சோழ நாட்டுத் | திருப்பதிகள். | |
| 18 | ,, | ,, | பாண்டிய நாடு | ,, |
| 13 | ,, | ,, | கொண்டமலைநாடு | ,, |
| 22 | ,, | ,, | தொண்டை நாடு | ,, |
| 2 | ,, | ,, | நடு நாடு | ,, |
| 12 | ,, | ,, | வட நாடு | ,, |
| 1 | ,, | ,, | திருப்பதி கொண்ட திருநாடு. | |
| 108 | ,, | | | |

திவ்ய தேசங்களின் திருக்கோல அமைப்புகள் :-

60 நின்ற திருக்கோலம் ஸ்தலங்கள்
21 வீற்றிருந்த ,, ,,
27 பள்ளிகொண்ட ,, ,,

வைணவத்தில் மூன்று திவ்யங்கள்; சிறந்த பொருளைத் திவ்யம் என வடமொழியில் அழைப்பார்கள் :-

1. திவ்ய சூரிகள் :— ஆழ்வார்கள்
2. திவ்வியப் பிரபந்தம் :— ஆழ்வார்களின் அருளிச் செயல்கள்.
3. திவ்ய தேசம் :— 108 திருமால் திருப்பதிகள்.

இத் தொகுப்பைப் பிரமாதா பிரமாணம் பிரமேயம் என்றும் கூறுவார்கள். வைணவர்கள் பிரபந்தம் (கருத்துக்களின் கட்டுரை எனப் பொருள்படும்). திருமாலின் சிறப்பினை வெளிப்படுத்தும் கருத்துக் கட்டுரை; நாலாயிர திவ்யப் பிரபந்தத்தையே சிறப்பாக வழிபடுவார்கள். இவ் 24 பிரபந்தங்கள் 4000 பாசுரங்கள் அடங்கியதும், சில வேறு விதமான எண்ணிக்கையில் 3884 பாசுரங்கள் கொண்டவையுமான 24 பிரபந்தங்கள். இவை 11 ஆழ்வார்களின் பாசுர எண்ணிக்கைகள்.

இவ்விபரங்கள் அடங்கிய, 108 திருப்பதிகள் வரலாறு, அவைகளின் இருப்பிடம் அடங்கிய விபரமான நூல் கூடிய சீக்கிரம் வெளிவரும். அடியேன் இதுவரை 88 திவ்ய தேசங்கள் விஜயம் செய்து குறிப்புகள் சேசரித்து உள்ளேன். மீதியுள்ள

20 திவ்ய ஸ்தலங்கள் தரிசனம் முடிந்ததும், ஸ்ரீமந் நாராயணன் கடாக்ஷத்தால் 1978 ஆண்டு வரும் வைகுண்ட ஏகாதசி தினத்தன்று வெளியிட முயற்சி செய்து ஏற்பாடு செய்து வருகிறேன். பக்தர்கள் ஆதரவை வேண்டுகிறேன்.

''பெரும் முருகனின் அடியாரான குமரகுருபரர் என்ற மகான் தமது மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில், திருமால் காப்பில்''

''பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டலே'' என்ருர். திருமாலும், திருமகளும் சேர்ந்து திவ்வியப் பிரபந்தங்களை, என்றும் இரு திருச் செவி சாய்த்துத் திருவுள்ளம் களிப்பக் கேட்டு மகிழ்கிருர்கள், என்பது பெரியோர் கருத்து.

''பெருமாள் மகுடம் சாய்க்கும்
படிக்குக் கவி சொல்லும்

ஞானத் தமிழ்க் கடலே'' என்ற தொடரால் பெருமாள் திருமுடி சாய்த்துத் திருவாய்மொழியைக் கேட்கிருர் என்ற உண்மை புலனுகிறது.

---

ஸ்ரீ வேத வியாஸாய நம:
ஸ்ரீ மத் ஆநந்ததீர்த்த பகவத் பாதாசார்யோப்ய நம:

# ஸ்ரீ மத்வ மதம்

த்வைதம் என்பது ஜீவனும் பரமாத்மாவும் வேறு; ஒன்றல்ல என்பதாகும். இது மத்வ மதத்தின் கொள்கை.

வாயுவு பகவான் ஸ்ரீமத்வாச்சாரியராக மூன்ருவது அவதாரத்தில் தோன்றியதாக வரலாறு.

முதல் அவதாரத்தில் ஸ்ரீ வாயு பகவான் அஞ்சனு தேவியிடம் ஆஞ்சநேயராய் தோன்றி ஸ்ரீ சீதா ராமருடன் பட்டாபிஷேகம் வரை சேவை சாதித்தார்.

இரண்டாவது அவதாரத்தில் ஸ்ரீ வாயு பகவான் பீமசேனராக அவதரித்தார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் சஹாயத்தினுல் ஜரா சந்தனைக் கொன்று ராஜஸூயயாகத்தை முடித்து அக்ஞாத வாசத்தில் கீசகன் உபகீசகர்களைக் கொன்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் சேவை செய்தார். ஸ்ரீ வாயு பகவான் ஸ்ரீ மத்வாச்சாரியராக மூன்ருவது அவதாரத்தில் தோன்றிய வரலாறு :— உடுப்பிக்குத் தென் கிழக்கே சுமார் 16 கி. மைல் தூரத்தில் பாஜக க்ஷேத்திரம் என்கிற குக்கிராமத்தில் தௌலவ அந்தணத்தம்பதிகளான ''வேதவதி ஸ்ரீ மத்ய கேஹ பட்டர் ஸ்ரீ அணந்தேஸ்வரரை குறித்து பிராத்தனை செய்ததின் பயனுக சகம் 1040 (கி. பி. 1238) விளம்பி ஸூ அஸ்வீஜ சுத்த தசமியில் விஜய தசமியன்று மூலா நக்ஷத்ரம் கடக லக்னத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

அக் குழந்தைக்கு ''வாசுதேவன்'' என்கிற நாமகரணம் சூட்டி குழந்தை வளர்ந்து வந்தது. வடமொழியில் (உடு) என்ருல் நக்ஷத்திரம் (பா என்ருல் தலைவன் என்று பொருள்.)

''உடுபா'' என்ருல் நக்ஷத்ரங்களின் தலைவன், அதாவது சந்திரன் தவமிருந்து ஈஸ்வரனின் அருள் பெற்ற தலம் ''உடுபி'' என்ற பெயர் பெற்றது.

வாசுதேவன் ஐந்தாவது வயது அடைந்ததும் பெற்ருேர் கள் அவனுக்கு ''உபநயனம் செய்து வைத்தனர். சுமார் எட்டாவது வயதில் ஸ்ரீ அச்சுத பிரேட்ச தீர்த்தர் என்ற மகானிடம் சந்நியாசம் பெற்றுக் கொண்டு, அவரிடம் வேதாந்த பாடம் பயின்ருர். தாயும், தந்தையும் மன வருத்தமடைந்த தைக் கண்டு வாசுதேவர் தனக்கு ஒரு சகோதரன் பிறக்கும் வரையில் தான் சந்நியாசம் கொள்வதில்லை என்று பெற்றவர் களுக்கு வாக்களித்தார்.

சிறிது காலம் கடந்ததும் ஸ்ரீ மத்யகேஹருக்கு ஓர் புத்திரன் பிறந்தான். வாசுதேவர் தனது 12 வது வயதில் பெற்ருேர் களுடைய சம்மதம் பெற்றுத் துறவறம் பூண்டு ''பூர்ணப் பிரக்ஞர் என்னும் நாமதேயத்துடன் விளங்கி இவரும் இவருடைய பெற்ருேர்களும் ''நெடியூரில்'' இருக்கும் தருணத்தில் வீட்டை விட்டு வெளியே போய் உடுப்பியை அடைந்து ஸ்ரீ சந்திர மௌளீஸ்வரர் ஆலயம், அனந்தீஸ்வரர் ஆலயத்தில் வழிபட்டார்.

'அநந்த' என்பது ஆதிசேஷனைக் குறிக்கிறது. அனந்தனின் பிரபுவானதால் அவர் அனந்தேஸ்வரர் ஆகிருர். பக்தர்கள் ஸ்ரீ அனந்த பத்மநாபராக வழிபடுகிருர்கள். ஸ்ரீ அனந்தேஸ்வரரின் கிருபையால் தான் பதின்முன்ருவது நூற்ருண்டில் அப்புனித மண்ணில் ''த்வைத மதத்தை நிறுவிய ஸ்ரீ மத்வாச்சாரியர் அவதரித்தார்.

முப்பத்திரண்டு சாமுத்ரிகா லக்ஷணங்களும் பொருந்திய ஸ்ரீ வாசுதேவர் உடுப்பியை விட்டுப் புறப்பட்டு தென் தேச ராமேஸ்வரம் வரை சென்று அந்தந்த மூர்த்திகளை தரிசித்து வழிபட்டு வரும் தருணத்தில் மைசூருக்கருகில் பத்ராவதி அம்பு நதிக் கரையில் ஒரு பெரிய பாறையை ஒரு கையால் தூக்கி வைத்ததாகவும், இதுபோல் உடுமலைப் பேட்டையின் சமீபத்தில் பிரம்மாண்ட பாறை ஒன்று தூக்கி வைத்ததாதவும் கூறப் படுகிறது. அப்பாறை இன்றும் ''மத்வராயன்'' பாறை என்று அழைக்கப் படுகிறது. தன்னுடைய சங்கீதக்கலையால் ஒரு சமயம் பட்டுப் போன மரத்தைத் துளிர்விட்டுப் பச்சை மரம் போல் செய்ததாக வரலாறு.

தென்தேச யாத்திரையை முடித்துக் கொண்டு திரும்பி உடுப்பி வந்து ''கீதா பாஷ்யம்'' செய்ததாகவும் அத்தருணத்தில் மத்யகேஹருக்குக் கடன் கொடுத்தவன் பணத்தைத் திருப்பித்தருமாறு கேட்க மத்யகேஹரால் கொடுக்க முடியாத நிலைமையில் இருந்ததை அறிந்து வாசுதேவர் அந்தக் கடன் காரனைத் தனியாகக் கூப்பிட்டு கீழே கிடந்த புளியங்கொட்டைகளை எடுத்து அந்தக் கடன்காரன் கையில் கொடுக்க அது அவனுக்குச் சேர வேண்டிய துகையாக இருக்கக்கண்டு ஆச்சரியப்பட்டான். இம் மாதிரி ஸ்ரீ மத்வர் சிறுவயதில் பல சமயங்களில் மனிதப் பிறவியில் பிறந்தவர்களால் செய்ய முடியாத காரியங்களைச் செய்திருக்கிருர்.

நாளடைவில் அவருக்கு ''ஆனந்த தீர்த்தர்'' என்ற பெயரும் வந்தது. அனந்த ரூபியான ஸ்ரீ பகவான் வசிப்பதற்குத் தகுதியான க்ஷேத்திரம் போன்ற மனம் உடையவரென்றும் மோக்ஷரூபமான ஆனந்தத்தைத் தரும் சாஸ்திரம் செய்தவரென்றும் பொருள். மத்வ மது+வ என்ருலும் அதே அர்த்தம்.

உடுப்பி சமீபம் ரம்மியமான மல்ப்பே கடற்கரை பிரசித்தமானது. இங்கு ஒருநாள் ஸ்ரீ மத்வாச்சாரியார் தியானத்தில்

ஆழ்ந்திருந்த போது புயல் காற்றில் ஒரு படகு கடலில் சிக்கித் தவிப்பதைப் பார்த்து தன் மேல் போட்டிருந்த காஷயாத்தை வீசியதுமே புயல் காற்று தணிந்து படகும் காப்பாற்றப் பட்டதும், படகில் உள்ள எந்தப் பொருளைக் கேட்டாலும் தருவ தாகப் படகோட்டி வாக்குறுதி கொடுத்தான். இவர் அப் படகிலுள்ள ஒரு கோபி சந்தனக் கட்டியை மாத்திரம் கேட்ட தற்கு அந்த மாலுமி அக் கட்டியை எடுத்துக் கொடுக்க அது உடைந்து அதிலிருந்து ஒரு கிருஷ்ண விக்ரஹம் காணப்பட பகவானை அவர் அதாரித்து "த்வாதச ஸ்தோத்ரம் என்று சொல்லப்படும் மந்திரத்தை (நைவேத்யம் செய்யும் பொழுது சொல்லும் மந்திரம்) சொல்லி அந்த விக்ரஹத்தை எடுத்துக் கொண்டு உடுப்பியை அடைந்தார். உடுப்பியில் உள்ள மத்வசரோவரத்தில் சுத்தி செய்து விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்து கோவிலும் கட்டினார்.

700 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ மத்வரால் பிரதிஷ்டை செய்யப்பட்டு முறைப்படி பூஜை ஆராதனைகள் தடத்தப்பட்டு வரும் ஸ்ரீ கிருஷ்ண சிலையைத் தொட்டு அலங்காரம் செய்வது ஸ்ரீ ஆசாரியரின் வழிவந்த சீடர்கள் தான்.

திருப்பதியில் உறையும் ஸ்ரீ வெங்கடாசலபதியை "கனக பிரும்மா" எனவும் பண்டரிபுரத்தில் பண்டரி நாதனை "நாதப் பிரும்மா" எனவும் உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ணனை "அன்ன பிரும்மா" என்றும் புகழ்கிறார்கள்.

ஸ்ரீ மத்வரால் நிறுவப்பட்ட எட்டு மடங்களைச் சேர்ந்த பால சன்யாச ஸ்வாமிகள், இரண்டு ஆண்டுகளுக்கு ஒருவராக கிருஷ்ண மடத்தின் நிர்வாகத்தை கவனித்து வருவதோடு, ஸ்ரீ கிருஷ்ணனின் அன்றாட அலங்கார நைவேத்ய ஆராதனை களைச் சிரத்தையுடன் செய்து வருகிறார்கள். இதற்கு "பர்யாயம் என்று பெயர்: ஸ்ரீ கிருஷ்ண மடத்தை நிர்வகிக்க ஸ்ரீ மத்வாச் சாரியார் தமது எட்டு சீடர்களை உடுப்பியில் உள்ள எட்டு மடங்களுக்கு நியமித்தார் :-

| மடங்களின் பெயர் | மடங்களின் ஸ்தாபன கர்த்தர்கள் | ஸ்ரீ மத்வாச்சாரியரால் கொடுக்கப்பட்ட விக்ரஹங்கள். |
|---|---|---|
| 1. பலிமாருமடம் | ரீஷிகேச தீர்த்தர். | ஸ்ரீ ராமர். |

| | | | |
|---|---|---|---|
| 2. | ஆதமாருமடம் | நரஹரி தீர்த்தர். | ஸ்ரீ சதுர்ப்புஜ காளிங்கமர்த்தன ஸ்ரீ கிருஷ்ணன் |
| 3. | கிருஷ்ணபுரமடம் | ஜனார்த்தன தீர்த்தர். | ஸ்ரீ துவிபுஜ காளிங்கமர்த்தன கிருஷ்ணன். |
| 4. | புத்திகேமடம் | உபேந்திர தீர்த்தர். | ,, விட்டல் மூர்த்தி. |
| 5. | சீரூருமடம் | வாமன தீர்த்தர் | ,, விட்டல் மூர்த்தி. |
| 6. | சோதேமடம் | விஷ்ணு தீர்த்தர் | ,, பூவராஹ மூர்த்தி. |
| 7. | காணூருமடம் | இராம தீர்த்தர் | ,, நாசிம்ம மூர்த்தி. |
| 8. | பேஜாவரமடம் | அதோக்ஷத தீர்த்தர். | ,, விட்டல் மூர்த்தி. |

எட்டு மடங்களையும் ஸ்தாபனம் செய்துவிட்டு பத்திரிகாஸ்ரமம் சென்று வியாஸமுனிவரிடம் சீடராயிருந்து, அவரிடமிருந்து பெற்று வந்த சாலிக் கிராமங்களில் ஒன்றை சுப்பரமண்ய க்ஷேத்திரத்திலும், மற்றொன்றை உடுப்பிக்கும் சுப்ரமண்ய க்ஷேத்திரத்தில் நடுவிலுள்ள மத்ய வாட க்ஷேத்திரத்தில் பிரிதிஷ்டை செய்து வைத்து ஆசாரிய ஸ்வாமிகள் அதிகாலையில் உடுப்பியிலும் நடுப்பகலில் மத்யவாடவிலும்இரவில் சுப்ரமணியத்திலும் மறுபடியும் மறுநாள் காலையில்சுப்ரமணியத்திலும் பகலில் மத்திய வாடவிலும் இரவில் உடுப்பியிலுமாக எம்பெருமானைச் சேவித்ததாகச் சொல்லப்படுகிறது. மேற்கூறிய எட்டு மடங்களுடன் முளுபாகல் மடம்; ஸ்ரீ பந்தரகெரெமடம்; ஸ்ரீ வியாஸராஜமடம் ஸ்ரீ உத்தராதிமடம்; ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி மடம் முதலிய மடாலயங்களும் இடம் பெற்றுள்ளன.

ஸ்ரீ மத்வர் தேச சஞ்சாரம் செய்து ஜனங்களுக்குப் பலதத்துவங்களை உபதேசித்து ஹிந்து மதத்திற்கு அஸ்திவாரமாகவுள்ள வேதங்கள், உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம் முதலியவைகளின் உண்மையான கருத்தை அவர் ஜனங்களுக்கு எடுத்து உரைத்து மக்கள் நல்ல சத்வகுண மிகுந்த வாழ்க்கையை நடத்தவேண்டும் என்றார்.

“ஒரு பொருளை அறியும் போது அறிவோனும் உண்மை; அறியப்படும் பொருளும் உண்மை; அறிவு, அறிவோன், அறியப்படும் பொருள் ஆகியவற்றின் இடையே உள்ள வேறுபாடுகள் நிலையற்றவை அல்லது பொய்யானவை என்னும் வாதம் சரியன்று.

அறிவு பெற நமக்குள்ள சாதனங்கள் மூன்று; நேரடி அனுபவம்; மேலோர் நூல்கள் ஊகித்தறிதல்—இவற்றின் மூலம் நாம் அறிவதெல்லாம் அறியப்படு பொருளோடு நேரடியாகத் தொடர்பு உடையதே; இதை அடிப்படையாகக் கொண்டு சிந்தித்தால் இவ்வுலகம் உண்மை என்பது புலப்படும்.

உலகத்திலுள்ள பொருள்கள் மாறுபடலாம் அல்லது மாறுமல் இருக்கலாம், வேகமாக ஓடி மறையாமல் இருக்கலாம், ஆனல், அவற்றைப் பொய் என்று சொல்ல முடியாது.

ஜீவன்கள் உடலைப் பெற்று உலகில் பிறக்கும்போதே பந்தம் அல்லது தளையில் சிக்கிக் கொள்கின்றன பல பிறவிகள் எடுத்துத் துன்பங்களில் உழன்று பெரு முயற்சி செய்து முடிவில் முக்தி அல்லது விடுதலை அடைகின்றன. கடவுளிடம் பூர்ண பக்தி உள்ள ஜீவன்கள் மட்டுமே வைகுண்டம் சென்று விஷ்ணுவின் சந்நிதானத்தில் நிரந்தரமாய் இருக்கும். ஆனல் இந்நிலையிலும் ஜீவன்களிடையே தாரதம்யங்கள் (வேறுபாடுகள்) உண்டு.

அஹிம்ஸை, பொறிபுலன் அடக்கம், எல்லா உயிர்களிடத்தும் கருணை, பிறர் குற்றங்கள் மன்னித்தல்; ஆத்ம ஞானம் பெறுதல்; தவம் புரிதல்; இறைவனை த்யானித்தல் ஆகியவற்ருல் எங்கும் நிறைந்த விஷ்ணு மகிழ்வார்.

விஷ்ணு சர்வோத்தமன்; வாயு ஜீவோத்தமன்; என்ற ஞானத்தோடு ஸ்ரீ மந்நாரயணனிடமும் குருவான ஸ்ரீ வாயு பகவானிடமும் களங்கமற்ற நிஷ்காம்யமான பக்தி செய்து யோக்கிய தானுசாரம்; சாரூப்யம்; சாலோக்யம்; சாமீப்யம்; சாயுஜ்யம் என்கிற நான்கு வித மோக்ஷத்தை அடைந்து; யோக்கியதானுசாரம் ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு; மோக்ஷத்திலேயும்; பகவானை தாஸர்களாக சேவித்துக் கொண்டிருப்பதே மோக்ஷம். ஸ்ரீ மத்வருடைய தத்துவத்தை அறிந்து, ஸ்ரீ சோபன பட்டர்; ஸ்ரீ த்ரிவிக்ரம பண்டிதாச்சாரியார் முதலியவர்கள் சிஷ்யர்களாயினர்.

ஸ்ரீ மத்வர் ஓர் சமயம் ஒரு கோவிலுள் கதவைத் தாளிட்டு த்யானத்திலிருக்கையில் ஸ்ரீ திரிவிக்ரம பண்டிதாச்சாரியர் கதவின் துவாரத்தால் பார்க்க உள்ளே ஹனும; பீம; மத்வ என்ற மூன்று அவதாரங்களால் ஒரே காலத்தில் ஸ்ரீ ராம கிருஷ்ண வேதவியாஸ ரூபங்களைப் பார்த்து, தன் குருவை ஸ்தோத்திரம் செய்தார். இது தான் வாயு ஸ்துதியாகும்.

பிறகு ஸ்ரீ மத்வர் அதை பகவான் பெயரால் ஸ்லோகங்களைச் சேர்த்து ஸ்ரீ ஹரி வாயு ஸ்துதி ஆக்கினர், தேவேந்திரன் எருது ரூபமாய் ஸ்ரீ மத்வர் உபதேசங்களைக் கேட்க, சிஷ்யர்கள் இந்த எருது எதற்காக என்று வினவ, அதற்கு ஸ்ரீ மத்வர் தன் க்ரந் தங்களுக்கு இந்த மாடுதான் வியாக்யானம் எழுதும் என்றார். சிஷ்யர்கள் கோபத்தினால் இந்த மாட்டை அரவம் தீண்ட சபித் தனர் (அரவம் என்றால் பாம்பு) பாம்பு வந்து மாட்டைக் கடித்தது. ஸ்ரீ மத்வர் தான் இயற்றிய துவாதச ஸ்தோத் திரத்தை ஜபிக்க அது பிழைத்தது. இந்த எருதாகிய இந்திரனே பிறகு ஸ்ரீ ஜயதீர்த்தாராக அவதரித்தார்.

துவாதச ஸ்தோத்திரம் தினமும் பூஜா காலத்தில் பகவா னுக்கு நெய்வேத்தியம் செய்யும் பொழுது சொல்லப்படுகிறது.

ஸ்ரீ மத்வரின் தாயாரும் தகப்பனும் ஒருவர் பின் ஒருவ ராக பரமபதம் அடைந்ததும் ஸ்ரீ மத்வரின் சகோதரர் பெற்றோர் கடமைகளை முடித்து சந்நியாசியாக ஸ்ரீ மத்வரிடம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க பாஜகக்ஷேத்திரத்தில் சந்நியாச ஆஸ்ரமம் கொடுத்து ''விஷ்ணுதீர்த்தர்'' என்னும் நாமதேயத் துடன் தேச முழுவதும் யாத்திரை செய்து தபோபலத்தில் ஈடு பட்டார்:

ஸ்ரீ மத்வர் ஜனங்களுக்கு தத்வோபதேசம் செய்து சிஷ்யர் களுக்கு ஐதரேய உபநிஷத் பாஷ்யத்தை உபதேசிக்கும் பொழுது தனது எண்பதாவது வயதில் மகா சுத்த நவமியன்று (1317 A. D.) மறைந்ததாக வரலாறு. ஞானத்திலும்; பலத் திலும், அழகிலும் சிறந்து விளங்கிய ஸ்ரீ வாயு பகவானின் மூன்றாவது அவதாரமான வாசுதேவர்; பூர்ணபிரக்ஞர்; அனந்த தீர்த்தர்; அனுமான் தீர்த்தர் என்ற நாமங்களைக் கொண்ட ஸ்ரீ மத்வாச்சாரியரின் உபதேசங்கள்;—''ஹரியே ஸர்வோத்தமர். உலகம் உண்மையானது. ஜீவனுக்கும் ப்ரம்ஹத்துக்கு பேதம் உண்டு. எல்லா ஜீவராசிகளும் ஹரியின் தாஸர்களே. அவரவர் களுக்குள்ளும் ஏற்றத் தாழ்வுகள் உண்டு.

மோக்ஷம் என்பது நமக்குரிய இன்பத்தைப் பெறுவ தாகும். அதை அடையும் வழி பரிசுத்தமான பக்தி தான். பிரத்யக்ஷம்; அனுமானம்; ஆகமம் என்ற மூன்றே பிரமாணங் கள்; ஸகல வேதங்களால் தான் அறியப்பட வேண்டியவர் ஹரி.

ஸ்ரீ மத்வர் முப்பத்தேழு நூல்கள் (37) எழுதியுள்ளார் அவற்றுள் முக்கியமானவை ஒன்பது (9).

1. பிரம்ம சூத்ர பாஷ்யம்; அனுபாஷ்யம்; அணு வியாக்யானம்,
2. பகவத்கீதைக்கு பாஷ்யம் தாத்பர்ய நிர்ணயம்.
3. மஹா பாரத தாத்பர்ய நிர்ணயம்.
4. பாகவத தாத்பர்யம்.
5. தசப்பிரகரணங்கள்.
6. த்வாதஸ ஸ்தோத்ரம்
7. சதாசார ஸ்மிருதி.
8. நரசிம்ம நகஸ்துதி
9. ஸ்ரீ கிருஷ்ண ஸ்துதி.

ஸ்ரீ மத்வருக்குப் பின் தோன்றிய ''டிகாச்சார்யர் என்னும் ஜய தீர்த்தர் ஸ்ரீ மத்வருடைய நூல்கள் எல்லாவற்றுக்கும் சிறந்த முறையில் உரை எழுதியுள்ளார் ஸ்ரீ அனந்தேஸ்வரர் கோயிலில் கருவறைக்கு முன்புள்ள மண்டபததில் வலப்புறத்தில் தமது சீடர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருந்த போது ஸ்ரீ மத்வாச்சாரியர் மறைந்த இடம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

''யோ விப்ரலம்ப விபரீத மதிப்ரபூதான்
வாதாந் நிரஸ்ய க்ருதவான் புவிதத்வ வாதம்
ஸர்வேஸ்வரோ ஹரீரீதி ப்ரதிபாத யந்தம்தம்
ஆனந்த தீர்த்த முனிவர்ய மஹம் நமாமி

தேவர் நாமா

சுபம் சுபம்

---

## சைவ சமயம்

சைவ சமயம் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டதன்று; ஆதியில் சிவ வழிபாடு ஒன்றே இருந்தது. இந்த வழிபாட்டை மேற்கொண்ட மக்கள் நாளடைவில் பிற்காலத்தில் சைவ மதத்தார் எனப்பட்டார்கள். சைவ சமயம் எப்பொழுது தோன்றியது, அதனைத் தோற்றுவித்த தலைவர் உண்டா என்றால் நமக்குத் தெரியவில்லை. தமிழ் நாட்டில் மக்கள் குறிஞ்சி நிலத்திலிருந்து முல்லைக்குப் பரவி அங்கிருந்து மருதத்தில் குடியேறி பண்பாட்டில் உயர்ந்து மேம்பட்டவர்கள்

என்பது பொதுவாக நிலவி வரும் கருத்து. மக்கள் முல்லை நிலத்தில் இருந்த காலத்திலேயே சிவபெருமான் வழிபாடு தொடங்கிவிட்டது. இது வேத காலத்துக்கும் முற்பட்டதாகும். இதற்கு ஆதாரம் சிவபெருமான் தோற்றம் பற்றி நூல்கள் கூறியிருப்பனவேயாகும். பழந்தமிழ் நூல்களில் இறையனுர் என்று தான் உள்ளது. சிவம் என்றில்லை. அந்நூல்களில் பெருமானின் வடிவு இயல்புகள் பேசப்பட்டுள்ளன. சிவம் என்னும் சொல்லடியாகப் பிறந்ததே சைவசமயம்.

சைவசமயம் வளர்ந்து வருங்கால் இதற்கு இடையுறு வந்தது சமணமதத்தால். இத்தருணத்தில் தெற்கே பல்லவர் ஆட்சியும். பாண்டியர் ஆட்சியும் ஓங்கியிருந்தும், இவருள் போரும் பூசலும் இருந்தது. இதற்கு முன் சமணசமயம் தமிழ் நாட்டில் நானூறு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே புகுந்து 7ஆம் நூற்ருண்டில் மகேந்திரவர்மன் என்ற பல்லவமன்னனை-யும், கூன்பாண்டியனையும் சமணத்துக்கு மாற்றி அவர்களைக் கொண்டு தமிழ்நாடு முழுவதிலும் தங்கள் ஆணையை விரிவு படுத்திக்கொண்டனர்.

வேத மதங்களாகிய சைவம், இவற்றுக்கு மாறுபட்ட மதம் சமணமதம். இதனுல் தமிழ்நாட்டில் சைவமும், வைணவமும், அழிந்து போகும் நிலையை எட்டியது. இந்த நிலையில் தான் முன்னே அப்பர் ஸ்வாமிகளும், அவரை அடுத்து ''திருஞான சம்பந்தரும் ஓரே காலத்தில் அவதரித்-தனர்.

அப்பர் சிறிது காலம் சமணத் துறவியாக இருந்தும் மீண்டும் சமணர்கள் இயல்பு பிடிக்காததால் சைவத்துக்கே திரும்பினவர். இந்தத் திருப்பத்தால் மகேந்திரவர்மனின் ஆணையைத் துணைகொண்டு சமணரால் அப்பர் சொல்லொ-ணுத் துயரங்களுக்கு ஆளாயினுர் என்று அப்பரின் வரலாறு கூறுகிறது.

அப்பர் சிவபெருமானின் அருளைக் கொண்டு அந்த அல்லல்களிலிருந்து தப்பிப் பிழைத்து மகேந்திரவர்மனையும் சைவத்தைத் தழுவுமாறு செய்தார். அரசன் வழி குடிகளும் என்கிற வாக்கியப்படி சமணத்தை வெறுத்து வேதவழி நின்றனர்.

திருஞானசம்பந்தர் மதுரை மாநகர் சென்று சமணருடன் வாதம் புரிந்து வென்று சமணத்தை ஒழித்துச் சைவசமயத்-தைப் பாண்டியநாட்டில் நிலைநிறுத்தினர்.

சுந்தரர் காலத்து தமிழ் நாட்டின் நிலை சம்பந்தர், அப்பர் காலத்தின் நிலையினும் வேறுபட்டது. சைவத்தின் போட்டியாகச் சமணமோ, பௌத்தமோ இருக்கவில்லை. சைவமும், வைணவமும் இணைந்து வளர்ந்தன. மதச் சார்பு பற்றிச் சேவை செய்த பெரியாரைப் பற்றி எழுதிய அறிஞ-ரெல்லாம் அப்பெரியோரிடம் மனித சக்திகளுக்கும் அப்பாற்-பட்ட தெய்வீக சக்தி இருந்ததாகவும், அதனல் அவர்கள் பல அரிய செயல்களைச் செய்திருக்கின்றனர் என்றும் கூறி-யிருக்கிருர்கள். தமிழ் மூவருக்கும் அந்தத் தெய்வீக ஆற்றல் இருந்ததென்பதனை அவர்களுடைய, வாக்காலும், வரலாற்ரு-லும், நாம் அறிகிருேம்.

## சைவ சமயம்

சைவம் என்பது சிவ சம்பந்தம்; சிவபெருமானை வழிபடு வோர்கள் வீபூதி; உருத்திராக்ஷம், அணிந்து வேதாகம நெறியே வழிபடுபவர்கள். இவற்றுள் சைவம்; சிவாத்து விதம்; சம்மேளனம், பாசுபதம்; மாவிரதம்; காளாமுகம்; வாமம்; வைரவம்; இவைகளே அஷ்ட (எட்டு) சைவம். சைவ பேதமாயுள்ளது ஊற்றசைவம்; அனுதிசைவம்; ஆதி சைவம்; மகானசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தர சைவம், குணசைவம்; நிற்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அவாந்தரசைவம், கிரியா சைவம், சுத்தசைவம், நாலுபாதசைவம், பேதசைவம் என்னும் பதினறு, இவை தவிர அட்டவாதமாவது, சிவசமவாதி, ஐக்க வாதி, சங்கிராந்தவாதி, பிரவாகேசுரவாதி, கபாலிகவாதி, அவிகாரவாதி, பேதாபேதவாதி, அனேகசுரவாதி, வேதாங்கீ காரமான வைதிகத்திற் பேதமானது, நியாயம், வைசேடிகம், மீமாஞ்சம், சாங்கியம் வைணவம், பாட்டம், பிரபாகரம், சுத்தப் பிரமவாதி, புராணீகன் என்பது.

1. அனுதி சைவன் என்பது சிவனே.
2. சிவபெருமான் முகம் ஐந்தில் தீட்சதரான கோப்த சுகாதி இருடிகளே ஆதிசைவர்கள்.

3. முதல் இரண்டு இருடிகளின் கோத்திரரும் தீட்சதரான சிவ தத்துவங்களை அனுஷ்ட்டிப்பவர்களே மகா சைவர்கள்.

4. சிவ சமத்காரங்களை அனுஷ்டிப்பவர்கள் க்ஷத்திரியர்களே அனுசைவர்.

5. சைவ தீட்சா சம்பன்னரான சூத்திரர்கள் அவாந்திர சைவர்கள்.

6. சைவ தீட்சா சம்பன்னரான அம்பரீட்டுலா வாதிகளே பிரவா சைவர்.

7. தீட்சா விதரானவர்களே அந்தர சைவரென்று ஆகமஞ் சொல்றுகின்றது.

வாமம், தட்சணம், மிசிரம், சித்தாந்தம் என்பது.

சக்தியே பரமென்பது வாமம். வயிரவ பரமானதே தட்சணம். சத்தமாதுற் பவமானதே மிசிரம். பரம சிவமானதே சித்தாந்தம்.

வீரசைவம், சுத்தசைவம், மிசிரசைவம், சாமானிய சைவம் என்பது வீபூதி தரித்து லிங்க வழிபாடு செய்பவர்கள் சாமானிய சைவன். பஞ்ச மூர்த்திகளை, கணபதி, சுப்ரமணியன், சிவன், அம்பிகை, விஷ்ணு வெகு சிலர் சூரியனையும் சேர்த்து ஆறு மூர்த்திகளாகவும் ஆகமப்படி வழிபடுவோர் மிசிர சைவர். ஆதிசைவ மரபில் மகா வேதாதி ஆகம சித்தாந்தியா யிருப்பவர்கள் சுத்த சைவர்.

## சம்மேளித சைவமதம்.

பாசம்—அனுதியாய் பசுவைப் பந்திக்கும், பதி—அனுதி முத்தன், பாசம்—அனுதி, பரன் பாசம்—பந்தம் என்று சிவத்தியான ஞான பூஜையால் பந்தங்களை நீக்கி சிவனேடைக்கியமாதல். பாசமாம் பந்தம் பசு பெத்தன் முத்தனும் ஈசனனுதியிவர் ஞானபூசையாலம் மோக மாறியவரொன்றல் வீடென்ருன் சம்மேளித சைவன்ருன்

## பாசுபதி மதம்

திரி பதார்த்தமே நித்தியமென்று கொண்டு தீட்சை பெற்று ஆசாரியன் மூலமாய் உபதேசம் பெற்று சிவ பூஜையால் நீரோடு நீர் கூடினுற் போலக் கலந்திருப்பதே முக்தியென்று கூறும் பாசுபதி மதம்.

## மகா விரதி மதம்

ஆன்மாக்களனுதியில் மலத்திரையங்களோடு கூடி வசிப்பவர். மும்மலமாவன—ஆணவம், கன்மம் மயை இவைகளை ஞான சக்தியால் ஆன்மாக்களை பெத்தாவத்தை படச் செய்வது. ஆன்மா ஒரு பக்குவத்தால் தீட்சை விதியால் மலத்தினின்று நீங்கி ஆகமப் பிரமாதிகளால் பூஜித்து கடைசியில் கருத்தத்துவ சங்காரத்தை விட்டு நித்திய வியாபக சைதன்னியனுன ஆன்மா சிவனது ஞான சக்தியுடையதாய் சிவலோகத்தில் ஞான மாத்திரத் துடனேயிருப்பான் என்பது. இது ஓர் உருத்திரரால் ஏற்படுத்தப்பட்டது.

## காளா முக மதம்.

மேற்சொன்ன மகா விரதியைப் போலவே சொரூப உக்கிரம். மகா விரதிக்கும் இதற்கும் பேதம் என்னவென்றுல் தந்திர பேதம் சிறிதுண்டு. அது ஆன்மா நித்திய வியாபக சைதன்னிய னென்பதே.

## வாம மதம்.

வாம மதத்தை சாத்தேய மதமென்றும் கூறுவர் சிலர். சக்தியே பரமென்று கொண்டாடுபவர்கள். பிரமாதி தேவர்களும் சக்த்யின் சிருஷ்ட்டியே என்று சொல்லுபவர். இச்சக்தி வாலை, புவனை, திரிபுரை என்று மூன்ருய் மூன்று சக்கரங்களைக் கொண்டுள்ளவை. இச்சக்கரங்களில் பொன் முத்லிய லோகங்களை பூ, மேரு முதலியவைகளை வார்ப்பித்து, மரந்திங்களால் அர்ச்சித்து, பிரசன்னத்லுவமாக்கிக் கொண்டு வழிபடுவர்.

## வயிரவ மதம்

வயிரவனையே பரமென்று கூறி ஆதிவயரவன் அஷ்ட்ட மூர்த்தமாய் அஷ்டகலையால் அகிலமும் பெற்ற ஜீவராசிகளுக்கு யோகமும், மூர்த்தமெனும் இவ்விரண்டால் நிருவாணமான முக்தியுண்டு என்று சொல்பவர்கள்.

## சிவசமவாதி மதம்

பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியமே என்றும், பதியாவது நாமரூப கிரியார கீதமாய், நித்தியமாய், அநாதியாய், சித்தாய், சத்தாய், நின்மலராய், சுத்தமாயிருப்பது. பாசமாவது அனாதி, நித்தியமாய் அனந்த வியாபக சக்தியை உடைத்தாயிருப்பது.

## ஐக்க வாதி மதம்

**(அயிக்கவாதி)**

இந்த மதம் சிவசமவாதி மதம் போல் ஆன்மா அனாதி சுத்தமென்றும் விசேஷதிக்ஷகைஷ பெற்று சிவவழிபாட்டில் அத்துவாசுத்தி பண்ணி, நிருவாண திஷ்ஷை யால் கன்ம நிக்கிரகஞ்செய்து கன்மம் நீங்குவது இது ஓர் உருத்திரரால் உண்டாக்கியது.

## சங்கிராந்தி வாதி மதம்

என்பது செக, சீவ, பரம், என்னும் மூன்றில், பரிசுத்தமாய், நித்தியமாய் அகண்ட்மாயிருப்பது. பசு-அனாதி சுத்த நித்தியமாயிருப்பது. பதி-ஒன்றையுஞ் சுட்டாமல் தீபம்போல விளங்கும். பாசம்-தனுகரண புவன போகங்களாய் விரிந்திருக்கும் எனக் கூறுவது.

## பிரவா கேசுரவாதி மதம்

ஈஸ்வரன், ஆன்மாக்கள், மாயை கன்மம் இவைகள் அனாதியிலேயேயுண்டு. ஆன்மாக்களுக்கு அனாதி மலமில்லை. மாயை பந்தப்பட்டுத் தத்துவ சேட்டையால் தனுகரண புவன போகங்களாய் விரிந்திருக்கும் திக்ஷா விதியால் மாயை கன்ம மிரண்டையும் நீக்கி, சுத்தனாய் அடைவர். இதில் செகம்மாயை; ஜிவா-பசு பரம்-பதி என்பதையே திரி பதார்த்த மென்பது.

## கபாலி மதம்

இந்த மதமும் சிவ சமயத்துள் மகாவிரதம் காளமுகம்போல ஒன்றாய் யிருக்கின்றது, இருந்தும் சில பாகம் பேதம் இருந்தாலும் ஏகதேச பொருத்தமுண்டு. இதுவும் ஓர் உருத்திரரால் இயற்றப்பெற்றது.

## அவிகார வாதி மதம்

அதிகார நித்தியேஸ்வரர் ஒன்று உண்டு. ஆன்மாக்கள் அஞ்ஞானமாய் ஆணவமல விருளிலழுந்தி அனேகராய் இருப்பர். ஆணவ மலம் இருளாம். பதி, பசு பாசம் இம்மூன்றும் அனாதி நித்தியமென்று கூறுவது சொரூப இலக்கணம். இதில் தடத்த லக்ஷணம்:- பதி- நீரும் தன்மையும் போல ஐக்கியப்படுத்தும், பசு-இறைவனது ஞானத்தால் ஸர்வத்தையுமறியும். பாசம்- மறைந்த சிவரூபத்தைக் கொள்ளும். இவர்கள் வேடம் நரகபால பிட்சாடனமாம். கருத்துருத்துவமே சங்காரமானதால், அது நீங்கி ஞெப்தி மாத்திரமானதே மோக்ஷம். இது ஓர் உருத்திராற் கற்பிக்கப்பட்டது.

## சைவ பேதா பேத வாதி மதம்

சைவாக மத்துட்பட்ட கிருத்திய லக்ஷணசித்தாந்தம். சக்தியின் பேதத்தாலே சிவனும் சத்தன்-யுத்தி யுத்தன், பிரவர்த்தனெனும் மூன்று சித்தாந்த இலக்கணங்களையே பிரமாணமாகக் கூறுபவர்கள்.

# அனேக சுரவாதி மதம்

கடவுள் உண்டு என்றும் அனேகரால் பஞ்ச கிருத்தியம் நடக்கிறது, ஆன்மா ஜனனமடையாமல் எப்போதும் சுகத்திலேயேயிருக்கும் என்றும் கூறுபவர்கள்.

# சோடச சைவ பேதம்

## (ஊர்த்த சைவம்)

சிவன் தத்துவாதீதன், விபூதி, ருத்திராக்ஷம், பூணூல் தரித்து சிவலிங்க பூஜை பக்தியாய் பஞ்ராக்ஷர ஜபம் செய்கிறவர்கள் துறவியும், கிரஹஸ்தாசிரமத்தில் இருப்பவர்கள்.

### அனாதி சைவம்

திரிபதார்த்தமாய் அனாதி நித்த வியர்த்தமாய் விளங்கும் குருலிங்க வேடமே பொருளாக் கொண்டு பூஜையால் பாசங்கள் நீங்கி ஆன்மா சிவனே பரமாய முக்தியென்று கூறுபவர்கள்.

### ஆதி சைவம்

இம் மதம் பசுவின் பொருட்டு எல்லாவற்றிற்குஞ் சிவனே பஞ்ச கிருத்தியங்களைத் துலக்கி நிஷ்களத்தோடு சகளமாகயிருக்கும் மோக்ஷ சாதனங்களை கடைப்பிடித்து சிவத்தோடு ஐக்கியமாக ஆன்மா போகமாய் யிருப்பவர்.

### மகா சைவம்

எல்லாவற்றிற்கும் மேலானது சிவவேதாகமங்கள். சன் மார்க்கத்துடன் சம்சாரம் நீங்கி, குருலிங்கமே பொருள் எனக் கொண்டு அருள்கூடி முக்தி பெறும் ஆன்மா எனக் கூறுபவர்கள்.

## பேத சைவம்

சிவன் மூவிதமாய் அரூபன்; உருபா ரூபன், ரூபர், சன்மார்க்கத்துடனே கூடி குருலிங்கத்தை வழிபட்டு சிவனது மூன்று வடிவிலும் தியானித்து வணங்குவதே மோக்ஷம் என்று கருதுபவர்கள்.

## அபேத சைவம்

பேத சைவரைப் போல் வேறுபாடின்றியிருக்கும். ஆனால் சன்மார்க்க நிலையால் சிவனையறிகிறதே முக்தி யென்று கருதுபவர்கள்.

## அந்தர சைவம்

இவர்கள் சிவ வியல்பை யடைவதே முக்தியென்று கருதுபவர்கள். இதில் வேறொரு அந்தர சைவருமுண்டு. ஆகம விதியையே பிரமாணமாகக் கொண்டு சிவனது அஷ்டம குணங்களையும் வழிபடுவது முக்தி என்று கூறுபவர்கள்.

## நிர்குண சைவம்

சைவபேதம் பதினாறிலும் பொருந்தாது. வேதாகம புராணாதிகளை ஏகதேசமாகக் கொண்டுள்ள இறைவன் குணம், நாமருபத்தில் கூடுவது முக்தி என்று கருதுபவர்கள்.

## அத்துவா சைவம்

சிஷ்யன் குருவை அணுகி தீட்சா பெற்று குருலிங்கமே பொருளெனக் கொண்டு அவற்றின் முடிவை தியானித்து நிஷ்டையில் ஈடுபடுவர்.

## யோக சைவம்

யோக நெறியைக் கடைப்பிடித்து நிஷ்டையில் அஷ்டமா சித்திகளையறிந்து; அனுபவிக்கிறவர்கள்.

## ஞான சைவம்

சிவனை குருமுகமாய் சிவபரபேதமறிந்து ஆன்மா பரத்தோடு கூடுவதே முக்தி என்று கருதுபவர்கள்.

## அனுச் சைவம்

பஞ்ச கிருத்தியங்களையும் தரிசித்து ஆனந்தத்தில் ஈடுபட்டு சன்மார்க்க லக்ஷணத்துடன் கூடி குருலிங்க ரூபமாகக் கருதுபவர்கள்.

## கிரியா சைவம்

ஆசாரியர் மூலமாக சதாசிவ மூர்த்தியை யறிந்து கிரியா திட்சைகளைப் பெற்று பஞ்ச சுத்தியுஞ் செய்து கொண்டு விதிப்படி நித்திய கர்மானுஷ்டானங்களைக் கடைப் பிடித்து வருபவர்கள்.

## நான்கு பாதசைவம்

ஞானம், யோகம், கிரியை, சரியை நான்கையும் ஒரு மொழியாற் சமாதி நிஷ்டை கூடி பிரம்மத்தில் ஐக்கியமாவதே முத்தி என்று கருதுபவர்கள்.

## சுத்தசைவம்

சமயங்களெல்லாம் பாசகாலமாக்கி வேதாந்த சித்தாந்த நான்கு முத்திரையுங் கடந்து சச்சிதாநந்தப் பிரம்ம முண்டாய் பிரம்மத்தோடு ஏகனுவது மோக்ஷம் என்று கருதுபவர்கள்.

## வீரசைவம்

அனுதி மூலத்துக்கப்பால், மகா மூலத்திற்கு மூலமாய் இரண்டாவது பொருளில்லாததாய் மூலஸ்வாமி ஒருவனே என்று கருதுபவர்கள்.

## கவுளயாமளை மதம்

இவை வாமி மதம் போல் சகலமும் சக்தியாலேயே உண்டாகிறது என்ற கொள்கையில் மாயா சக்தி, சப்த

மாதர்கள், துர்க்கை, முதலிய பல பேதங்களோடு பூஜிப்பவர்கள்.

வேதாங்கீகாரமான மதங்கள் வேறு வேறு வேறு வகையாக முத்தி பேதங்களைக் கூறுமேயல்லாது சமயத்தில் ஒன்று பட்டவைகள். இவைகள் சைவ வைணவ சமண மதங்களுக்கு கண்ணிய மில்லாததால் விவரத்துடன் எழுதவில்லை. அவைகள் :-

1. கீரீடப் பிரமவாதி 2. மாயாவாதி 3. அச்சு மாருத வாதி 4. பூருவ மீமாம்சை 5. பாற்கரியம் 6. பாட்டம் 7. புராணிகம் 8. லீலாப் பிரமவாதி 9. வைதீக வேதாந்தம் 10. சாங்கியம் 11. வைசேடியம் 12. சத்தப் பிரமவாதி 13. பிரபாகரம் 14. பஞ்சராத்திரியம் 15. பிரதி விம்பவாதி 16. சுத்த-வேதாந்தம் 17. நீரீசுரவாதி 18. நையாயிகம் 19. வையாகரணி 20. ஆநந்தம்.

உதாரணமாக :- மீமாம்சகன் வேதம் அநாதியென்றும், ஈசனை வேண்டாது கர்மம் பலனைக் கொடுக்குமெனவும் கூறுபவர். மாயாவதி மதமானது பரப்பிரம்மம் மாயோபாதியினுலே வாதிக்கப்பட்டு சரீரத்தினுள்ள ஜீவான்மாவாக நின்று ஜீவான்மா விவேக ஞான-மடைந்து மாயாவத்தை கடந்து பரமனோடு அபேதமாய் விடுமென்று கூறுபவர்.

பஞ்சராத்திரி மதம், நாராயணர் தம்மை வழி-பட்டவர்களுடைய பாச பந்தத்தை யொழித்து வீர சாந்தியிலே முக்கி சுத்தர்களாக்கி வைகுண்டத்திலே அவருடைய சாரூபத்தைக் கொடுப்பவர் என்கிற கொள்-கையுடையளர்.

சாங்கிய மதமானது அறியாமை உதித்த போது பிரபஞ்ச மெல்லாந் தானே நிற்பவன் என்றும் விவேக ஞான மெய்திய அவையனைத்தும் பிரகிருதிக்கே யன்றி தனக்கில்லை என்று கூறுபவர்கள்.

## உலோகாயதன மதம்

இது நித்தியமாயுள்ள நான்கு பூதமும் (ஸ்பரிச-ரூப ரச—கந்தம் இந்நான்கும்) நிந்தியமே. நான்கு பூதங்கள் கலப்பால் பொறி, புலன், குணம், புத்தி இவைகளால் அண்டாதிகள் உண்டு என்று கூறுபவர்; மரணமே நிச்சய மோக்ஷம். பூதம் நான்குமே சொரூபம். இதிலிருந்து போதம் பிறக்கிறது என்று பிரகஸ்பதி பகவான் உலோகாயத மதத்தை யுண்டாக்கினர்.

## யோக சாரன் மதம்

மேற் சொன்ன போதமான கரணேந்திரியாதி கள் பொருளாய்த் தோன்றியது. மருந்தெண்ணெயில் எப்படி மருந்துகள் மறைதிருந்து பிரதிபலிக்கிறதோ அதுபோல போதம் உள்ளிருந்து தொன்றுதொட்டு பலிக்கும் என்றபடி இவர்கள் தெய்வம் யோனியிற் பிறவாது தாய் வயிற்றைப்பீறி வந்தாரென்று கூறுபவர். தெய்வம் புத்த சுவாமியேயாம்.

## மாயத்தகன் மதம்

தேகம் அவயவங்களோடு கூடினது. இவ் அவ யவங்கள் அழிந்து போனல் அத்தேகத்தில் அழியாப் பொருள் ஒன்றில்லே. அது சூக்ஷமமாயிருக்கிற பொருளேக் கண்டதுமில்லே. கடவுள் சுக துக்கங்களே ஸ்பரிசிக்க மாட்டார். சுத்த ஞான ஒழுக்கமென்பதே முக்தி என்பது முன்கூறிய புத்த சுவாமியே தெய்வம்.

## வைபாடிகன் மதம்

ஸ்திரீ புருஷசைதன்னியத்திலின் பஞ்சஜனித்தது போல் சக ஞானபொருள்கள் தோன்றும். ஞானமெல் லா மொழிதலே பதவி ஆன்மா அணு என்று கூறு பவர் சுகரிஷி.

## நிகண்டாவாதி மதம்

அஷ்ட குணுதிசயராய் சர்வ ஞானயோக சித்தியால் முக்தியருள் பெறுவர் என்று கூறுபவர்.

## ஆசிர்வகன் மதம்

நிகண்டா வாதியைப் போலவே சிறிது வித்தி-யாசமாகவே அருளையே பரமென்று கூறுபவர்கள்.

## பஞ்ச பூத வாதி மதம்

பிருதிவி, அப்பு, அக்கினி, வாயு, ஆகாயம் இவைகள் ஒவ்வொன்றையும் பரமென்று கூறி வழிபடு வர்கள்.

## பஞ்சகோசவாதி மதம்

அன்னமயம், பிராணமயம், மனேமயம், ஆனந்த மயம், விஞ்ஞான மயம் என்று ஐந்து பொருளும், ஆனந்த மயமே முக்தி ரூபமென்று கூறுபவர்கள்.

## நவக்கிரக வாதி மதம்

நவகிரகங்கங்களின் லக்கனப் படியே உலகமும் உயிர்களும் சம்பவிக்கின்றன என்றும் அவர்களே கடவுள் என்றும் கூறி வழிபடுபவர்கள்.

## சூர்ய வாதி மதம்

சூரிய பகவானில்லாவிடில் எக் காரியங்களும் நடவாததால் தெய்வமென்று கூறுவர்.

## சந்திர வாதி மதம்

சூர்யனைப் போல் சந்திரனே பரமமென்று வழிபடு வார்கள்.

## ஊழ்வாதி மதம்

கன்மமே பிரம்ம மயம், அன்னியம் வெறென்று மில்லை என்று கூறுபவர்கள்.

## காலவிதி மதம்

காலம் ஒன்று மாத்திரம் அழியாமல் மற்றெல்லாம் மாறுபடுவதால் காலமே பரமென்று கூறுபவர்கள்.

## மந்திரவாதி மதம்

மந்திரத்தால் தேவர்கள் முதல் கட்டுப்படுவதால் மந்திரத்தை விட்டு சுப அசுப காரியங்கள் நடவாததால் மந்திரமே தெய்வமெனக் கூறுபவர்கள்.

## எந்திர வாதி மதம்

யந்திர சகாயத்தால் மந்திரம் தேவர்கள் நிலை பெறுவதால் இவைகளுக்கெல்லாம் பரமாயிருப்பது யந்திரம் இதுவே தெய்வமெனக் கூறுபவர்.

## அவிழ்த வாதி மதம்

மருந்துகளே சகல உயிர்களை ரக்ஷிப்பதால் மருந்தே தெய்வமெனக் கூறுபவர்.

## சாக்தேய மதம்

சக்தியே பிரம்மமென்றும் பஞ்சக்ருத்தாக்களும், பஞ்சசக்திகளும் சக்தியால் தான் உண்டானார்களென்றும் இம்மதம் கபிலருடைய கோட்பாட்டையனுசரித்து தோன்றியதாகவும் கூறுபவர்.

## காணபத்திய மதம்

இம்மதத்தினர் கணபதியே பிரம்மமென்றும் இவருக்கு மேல் வேறொரு பரனில்லையென்றும் இவராலேயே சகல காரியமும் நடப்பதாகவும் கருதுப்வர்கள்.

## கௌமார மதம்

சுப்பிரமணியர்; முருகன் (குகன்) இவருக்கு மேல் ஈசுவரனில்லை என்றும் இவராலேயே சகலகாரியமும் உண்டாகிறதாகவும் தத்துவம் கொண்டவர்கள்.

## சூனியவாதிகள் மதம்

ஈசுவரன் காணப் படாமையால் ஈசுவரனில்லை யென்பார்.

## பிராணாத்துவாதி மதம்

பிராண வாயுவிக்கு மேல் ஈசுவரன் இல்லையென்றும் ஆன்மா வொன்றில்லையென்றுங் கூறுபவர்.

## இந்திரியாத்தும வாதிகள் மதம்

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆக பஞ்சேந்திரியங்களுக்கு மேல் ஈசுவரர் ஒருவரில்லை என்றும் ஆன்மா வொன்றில்லை என்றுங் கூறுபவர்.

## சார்வாக மதம்

இம் மதத்தை உலகாயதமென்றும், பிரகஸ்பதி கோட்பாடென்றும் சொல்வதுண்டு: இந்த மதத்தை ஸ்தாபித்தவர் யார் என்று விவரமாக இல்லை. ஆனால் மகாபாரதத்தில் சாந்தி பருவத்தில், ஆயிரத்து நானூற்றுப்பத்தாவது சுலோக ஓர் கதையில் சார்வாகன் என்னும் ராக்ஷஸன் பிராமண பரதேசி வேஷத்தில் யுதிஷ்டிர மகாராஜா இருக்கும் அஸ்தினபுரத்துக்கு செல்லும்போது சமய விஷயமான தூஷணைகளைச் சொல்லியதாக இருக்கும் வரலாற்றிலிருந்து இந்த ராக்ஷஸனே சார்வாக மதாதிபதியாக யிருக்கும் என்று எண்ணப் படுகிறது. இந்தச் சார்வாக மதத்தைப் பற்றி மாத்துவாசாரியரால் இயற்றப்பட்ட "சர்வதரிசன சங்கரக" என்னும் கிரந்தத்தில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.

## சைன மதம்

ஆருகதம் அல்லது அருகனை வணங்கும் சமயத்தை சைன சமயம் என்று சொல்லுவார்கள். மேலும் புத்த சமயத்தைப் போலவே அமைந்தது. ஆனால்

சுத்த நாஸ்திகமில்லே, சுவேதாம்புரிகள், திகம்பரிகள் என இருவகைப்பட்டவர்களாக இருந்தாலும் சைன வேதாகம அங்கங்களே ஒரே விதமாக நம்பி அனுசரிப்பவர்கள்.

## பிரம்ம சமாஜம் மதம்

இம் மதம் இராஜா ராம் மோகன் ராயால் ஸ்தாபிக்கப்பட்டது. இவர் பரப் பிரம்மத்தையே உபாஸனே மூலமாக அறிந்து ஆனந்தப்படும் பக்தி மார்க்கத்துக்கு செல்லுவது. பிரம்ம சமயம் என்பது பிரம்ம சாமாஜமென்று வழங்கிவருகிறது.

## ஆர்ய சமாஜம் மதம்

இந்த சமாஜத்தை ஸ்தாபித்தவர் ஸ்வாமி தயா நந்த ஸரஸ்வதி. ஆரிய வேதங்களேயே பிரமாண்ங்களாக் கொண்டு பரம்பொருளே வணங்குபவர்கள்.

## தியாசபி மதம்

இம் மதத்தினர் இந்து மதக் கடவுள் பக்தியில் பற்றுள்ளவர்கள். 1875 ஆம் வருஷத்தில், அமெரிக்கா, நியூயார்க்கில் ஸ்தாபிக்கப்பட்டு 1880 ஆம் வருஷம் கர்னல் ஆல்காட் என்கிற அமெரிக்கரும், ருஷியா தேசத்து மாது மாடம் பிளாவட் ஸ்கியும், இந்தியாவுக்கு விஜயம் செய்து பம்பாயில் இத்தேசத்து பூர்வங்களே அறிந்து கொண்டு மந்திரம், தந்திரம் உண்மையென மகிமைகளே ஜனங்களுக்குக் காட்டியதாக வரலாறு.

இவ்விருவரும் புத்த சமயத்தாராக இருந்தும் இதில் அநேக பிராமணர்கள் மற்றவர்களும் இவர்களுடைய கோட்பாட்டை அனுசரித்து இந்தியாவில் அனேக இடங்களில் சபைகளே அமைத்ததில் 1926 ஆம் ஆண்டு மகாசபைக்குத் தலைமைவகித்தவர் மாது "அனி பெசண்ட்".

# ஜைன சமயம்

நமது பாரத நாட்டின் வரலாற்றை நேரிதின் ஆராயின், ஜைனமும், பௌத்தமும், வளர்ந்தோங்கி யிருந்த காலம்வரை அந்நிய நாட்டார் எவரும் நமது பாரதநாட்டின் மீது படையெடுத்து நுழைய இயலாம லிருந்தது. வால்மீகி இராமாயணத்தில் ஸ்ரீ ராமபிரான் தமிழகம் வந்தபோது, இங்குள்ள ஜைன முனிவர்களைத் தரிசித்துச் சென்றூர் எனக் கூறியிருப்பதினின்றும் ஜைனம் இராமாயண காலத்திற்கு முன்னரே தமிழகத் தில் விளங்கியிருந்தது என்று தெரிய வருகிறது.

அந்நாள் முதலே சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஜைன சமயத்தை ஆதரித்ததாக வரலா–றுள்ளது. இதன் பின்னர் அசோகன் படையெடுப்பால் தமிழகத்தில் பௌத்தம் இடம் பெற்றது.

இன்றையத் தமிழ் நூல்களில் மிகத் தொன்மை வாய்ந்த தொல்காப்பியத்திலும் ஜைன சமயக் கொள் கைகள் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

மேல்நாட்டு அறிஞர் ''கால்டுவெல்'' ''ஜைன சமயம் தமிழகத்தில் சிறப்புற்று விளங்கியது என்று தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். ஜைன மதம் இந்திய மண்ணில் தோன்றியது. இருந்தும் இச் சமயத்தைப் பின்பற்றும் மக்கள் எண்ணிக்கை அளவில் இன்று அதிகம் இல்லை. ராஜஸ்தான்; மகராஷ்டிரம்; குஜராத் ஆகிய மாநிலங்களில் தான் ஜைனர்கள் அதிகம் வசிக்கி ருர்கள்.

ஜீனர் என்ருல் வெற்றி பெற்றவர். ஜைனர்கள் என்ருல் ஜீனரைப் பின்பற்றுவோர் என்று பொருள்.

ரிஷப தேவர் போதித்த ஜைன சமயத்தை ''பாஷண்ட மதம்'' என்றும் சொல்லியிருக்கிருர்கள். சரித்திரச் சான்றுகள் எழுத்து மூலம் கிடைப்பதற்கு

இயலாது இருந்த ஒரு காலத்தில், இந்தியாவில் வாழ்ந்த மக்கள் எழுத்தறிவு இல்லாது இருந்தார்கள். அச்சமயத்தில் அயோத்தியை ஆண்ட நாபி என்னும் அரசனுக்கும் மருதேவிக்கும் பிறந்தவர் ''ரிஷப தேவர்'' வளர்ந்து வந்த நாளில் நாடு பல வகையிலும் தாழ்ந்த நிலையில் இருந்தது. மக்களை நல்வழிப்படுத்துவதற்கு, கல்வி, தொழில் அவசியம் என்பதை உணர்ந்த ரிஷபதேவர் ''ஒலி வடிவில் இருக்கும் பேச்சை, வரிவடிவில் வரைந்து கொடுத்த எழுத்துகளுக்கு ''பிராமி'' வடிவம் என்று பெயர். இந்த வடிவம்தான் தமிழ் மொழியின் ஆதி வடிவமாய் இருக்கக்கூடும் என்று ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள். வேளாண்மை மூலம் உணவு உற்பத்தி செய்யவும், உணவு பண்டங்களைச் சமைத்துச் சாப்பிடவும் வழிகாட்டிக் கற்றுக்கொடுத்து, இல் வாழ்க்கை நடத்தவும் சமுதாயமாகச் சேர்ந்து வாழவும், மக்கள் மேன்மையாக வாழவும் வழிகாட்டியவர் ரிஷப தேவர்தான் என்று அவரை ஜைனர்கள் முதல் தீரத்தங்கரர்; ஆதிநாதர் என்றும், ஆதிபகவன் என்றும் போற்றி வணங்கு கிறார்கள். தீர்த்தங்கரர் என்பது வடசொல். தீர்த்தம் என்றால் நீர்நிலை; கரர் என்றால் கரையேற்றுபவர் என்று பொருள். அதாவது, பிறவிப் பெருங்கடலில் உழன்று தத்தளிக்கும் ஆன்மாக்களைக் கரையேற்றுபவர்.

ரிஷப தேவரை முதல்வராகக் கொண்டு இது வரை இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் மக்களிடையே தோன்றி ஜைன சமயம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. பத்தாம் நூற்றாண்டு வரை மிகுந்த செல்வாக்குடன் விளங்கியிருக்கிறது. தனி மதமாக இருந்து செல்வாக்குடன் திகழவில்லை. பிற மதங்களுக்கு மத்தியிலே செல்வாக்கும் மேன்மையும் அடைந்து விளங்கி வந்தது. ரிஷப தேவர் இல்லறம்; துறவறம்; அஹிம்ஸை; ஆகியவைபற்றி போதனை செய்தார். ஜைனர்கள் ரிஷப தேவரை வழிகாட்டும் மானுடராக தீர்த்தங்கராக மட்டும் கருதுகின்றனரேயன்றி, அவரை அவதார புருஷராக

ஜைனர்கள் கருதுவது இல்லை. ஜைன சமயமே இந்தியாவின் தொன்மையான சமயம் என்பதற்கு இரண்டு முக்கிய காரணங்களை ஜைனர்கள் கூறுகிறார்கள். ஜைனர்கள் போற்றிக் கொண்டாடும் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் ஆதிநாதர் என்பவர்தான் முதல் தீர்த்தங்கரர்; இவரையே ரிஷப தேவர் என்று கூறுவது உண்டு. இவருக்கு பரதன் என்று ஓர் புதல்வர் இருந்தார் (ஜடபரதர் என்றும் சொல்வார்கள்.) இவர் காலத்திலிருந்துதான் இந்திய நாட்டுக்கு பாரதநாடு, பாரத கண்டம் என்று பெயர் வந்ததாகப் பாகவத புராணத்தால் அறியப்படுகிறது, நாரத புராணத்தில் (அக்னி புராணம்) இந் நிலம் முதன் முதல் ரிஷப தேவர் குமாரனான பரதனால் ஆளப்பட்டமையால் பரத கண்டம் எனப் பெயர் பெற்றது என்று கூறப்பட்டுள்ளது.

(PERMANANT HISTORY OF BHARATA VARSHA VOL–1).

மொகஞ்சோதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் செய்த புதைபொருள் ஆராய்ச்சிகள், இந்தியாவில் நிலவிய ஆதிசமயம் ஜைன சமயம்தான் என்பதற்கும், அது திராவிட சம்பந்தமான சமயம் என்பதற்கும், ஆதார பூர்வமான சான்றுகளாய் விளங்குகின்றன:-

இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களின் பெயர் :—

1. ரிஷபதேவர்
2. அஜித நாதர்
3. சம்பவ நாதர்
4. அபிநந்தனர்
5. சுமதி நாதர்
6. பதும நாதர்
7. சுபார்சவ நாதர்
8. சந்திரப் பிரபர்
9. புஷ்பதந்தர்
10. சீதள நாதர்
11. சிரேயாம்ச நாதர்
12. வாசு பூஜ்யர்
13. விமல நாதர்
14. அனந்த நாதர்
15. தரும நாதர்
16. சாந்தி நாதர்
17. குந்து நாதர்
18. அரநாதர்
19. மல்லி நாதர்
20. முனிசுவிரதர்
21. நமிநாதர்
22. நேமி நாதர்
23. பார்சுவ நாதர்
24. வர்த்தமான மகாவீரர்.

ரிஷபதேவர் தம் புதல்வர் பரதனுக்கு முடி சூட்டிய பின்னர் துறவற வாழ்வை மேற்கொண்டு கரும பந்தத்தை விட்டு விட்டு, அவதூதராக; திகம்பரராக ஆடையின்றி பல்வேறு பகுதிகளை அடைந்து கடைசியில் கைலை மலையை அடைத்து ஓர் சிவராத்திரியன்று வீடுபேறு பெற்ருர் என்று வரலாறு.

ரிஷபதேவரின் சரித்திரம் ''பாகவதபுராணம் : ஸ்கந்தம் ஐந்து 4, 5, 6 முதலிய அத்தியாயங்களில் உள்ளது. ரிஷப தேவருக்குப் பின்வந்த தீர்தங்கரர்களில் இருபத்திரண்டாம் தீர்தங்கரரான ''நேமி நாதரைப்பற்றி'' சில சரித்திரச் சான்று களில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நேமி நாதர் தீர்த்தங்கர் உறவினர் என்றும் கூறுகிருர்கள். ஸ்ரீ கிருஷ்ணனை ஜைனர்கள் தாங்கள் போற்றும் பற்றற்ற கருமத்தை நிஷ்காமிய கருமத்தை ஸ்ரீ கிருஷ்ண பகவான் உறுதியோடு போதித்து இருக்கிருர் என்று ஜைனர்கள் கூறுகிருர்கள். கிருஷ்ணன் வேத வேள்வியை மறுக்கவில்லை. வேத வேள்விகளில் அவர் பங்கு பற்றி இருக்கிருர். ராஜ சூயம் போன்ற வேள்விகளில் அவர் கலந்து கொண்டிருக்கிருர். இதிலிருந்து அஹிம்ஸையை முதன்மை யாகக் கொண்ட ஜைன சமயமும், வேத வேள்வியை முதன் மையாகக் கொண்ட ஆரிய சமயமும் ஒன்ருேடென்று கலந்து ஒரு பொதுப் பண்பாடு பரத கண்டத்தில் உருவான காலம் ஸ்ரீ கிருஷ்ணன் வாழ்ந்த காலம். அதனுல்தான் இருதரப்பாரும் ஸ்ரீ கிருஷ்ணனைப் போற்றியிருக்கிருர்கள்.

நேமிநாத தீர்த்தங்கரர் சுமார் ஆயிரம் ஆண்டுக் காலம் இந்த மண்ணுலகில் வாழ்ந்து, பிறகு வீடுபேற்றை அடைந்தார். இவருக்குப் பின் பார்சுவநாதர் இருபத்து மூன்ருவது தீர்த்தங் கரர். அரசு குலத்தில் பிறந்தவர், வேள்வியின் பொருட்டு உயிர்க் கொலை செய்வதையும் சமுதாயத்தில் சாதிப்பாகு பாடு களைப் புகுத்துவதையும், இவர் வன்மையாக கண்டித்தவர். மேலும் அஹிம்ஸை; திருடாமை; வாய்மை, அவாவின்மை; இந்த நான்கு கோட்பாடுகளையும் பார்சுவநாதர் போதனை செய்து இவற்றைப் பரப்புவதற்கு உரிய ஏற்பாடுகளை செய்ய, துறவிகள்; பெண் துறவியர்; இல்லற ஆடவர்; இல்லறப் பெண்டிர் இப்படி நான்கு பிரிவினராகப் பிரித்து; ஜைன சமயத்தைப் பரப்பவும் ஏற்பாடு செய்தார் என்றும் சரியாக நூறு ஆண்டுகள் மண்ணுலகில் வாழ்ந்ததாகவும் வரலாறுள்ளது.

இவருக்கு அடுத்தபடியாகவும் கடைசித் தீர்த்தங்கரரான வர்த்தமான மகாவீரர் காலத்தில் தான் புத்தர் பெருமானும் ஊர், ஊராகச் சென்று தமது சமயத்தைப் பரப்பியதாக வரலாறு கூறுகிறது.

ஹிந்து சமய, புத்த சமய தாக்குதல்களிலிருந்தும் ஜைன சமயத்தைப் பாதுகாப்பது அவசியமாயிற்று மகாவீரருக்கு. எந்த மதமும் ஆரம்பத்தில் ஒன்ருக இருக்கும். நாளடைவில் கருத்து வேறுபாடுகள், பழக்க வழக்கங்கள் வேற்றுமைகள் தோன்றி அந்த மதத்தில் பிளவு ஏற்பட்டு பிரிவுகள் ஏற்பட்டு விடுவது உண்டு. இதைப்போலவே ஜைன சமயத்தில் இரண்டு முக்கிய பிரிவுகள் உண்டாயின. ஒன்று திகம்பர ஜைனர்கள். இதில் வடநாட்டில் உள்ள ஜைனர்கள் சுவேதாம்பர ஜைன சமயத்தையும், தமிழ் நாட்டிலும், மைசூரிலும் உள்ளவர்கள் திகம்பர ஜைனத்தையும் பின்பற்றுகிறவர்கள். மகாவீரரை தமது இருபத்து நான்காவது தீர்த்தங்கரராக ஏற்றுள்ளார்கள். இம் மகாவீரரைத் தொடர்ந்து எட்டு ஆசாரியர்கள் பீடத்தில் இருந்து இருக்கிருர்கள். இதில் எட்டாவது ஆசாரியர் ''பத்திர பாகு'' என்பவர். இவர் காலத்தில் கட்டுப்பாடுகளை அதிகம் வேண்டாத ஒரு பிரிவினர் இருந்து வந்தனர். தங்களை ''அர்த்த பாலகர்கள் என்று தனித்து இயங்கத் தொடங்கினர். இவர்களே இப்பொழுது ''சுவேதாம்பரர்களாக இருக்கின்றனர். இந்தப் பிரிவு கி. பி. 80-ஆம் ஆண்டில் ஏற்பட்டதாக திகம்பரஜைனர்கள் கூறுகின்றனர். மகாவீரர் திகம்பரராக—அதாவது நிர்வாணமாக இருந்தார் என்பது. திகம்பர ஜைனர் தொன்று தொட்டே தமிழ் நாட்டில் இருந்து வந்ததாகத் தெரிகிறது. இவர்கள் அஹிம்சையையும், புலால் உண்ணுமையும் முக்கிய விரதமாகக் கொண்டவர்கள். அருக தேவனை வழிபடுபவர்கள். ஜைனர்கள் கல்வி கேள்விகளிலும் வாதம் புரிவதிலும் சிறந்து விளங்கி இருக்கிருர்கள். தியாக புத்தியுடன் பொதுப் பணியில் ஈடுபட்டு தொண்டு புரிந்து வந்திருக்கிருர்கள். ஜைனர்கள் பத்துப் பண்புகளைத் தொடர்ந்து கடைப்பிடித்து செல்வாக்குடன் விளங்கினுர்.

1) துறவறத்தை முக்கிய விரதமாகக் கொண்டிருந்தபடியால், உண்டி, சுருக்கி, ஆடம்பரமின்றி துறவிகள் வாழ்ந்தனர். பிறர் உதவியை நாடாமல், பிறருக்குத் தங்களால் இயன்ற அளவு மனமுவந்து உதவி செய்து வந்தனர்.

2) தங்கள் மதத்தைப் பற்றி பொதுமக்களிடம் பிரசாரம் செய்யும் பொழுதும், அறத்தை எடுத்து உரைக்கும் போதும் பிரதேச மொழியையே பயன்படுத்தி, நீதி நூல், மருத்துவ நூல்கள் எழுதினர்.

3) ஜைனர்கள் ஆரம்ப காலத்தில் வாதப் போர்கள், பகைமையை உண்டாக்கவில்லை. ஜைன சமயத்தில் அனேகாந்த வாதம் என ஒரு தர்க்க முறை உண்டு. எந்த ஒன்றை ஆராய்ந்தாலும் பல கோணங்களில் இருந்து ஆராய்ந்து முடிவுக்கு வரவேண்டும். ஒரு கோணத்தில்மட்டும் நின்று ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருவது பிசகாகும். தர்க்க வாதங்-கள் புரிந்து, பிற சமயத்தவரைத் திருத்த முயன்று இருக்கின்-றனர்.

4) பொதுக் கல்வி சம்பந்தமாக, அந்தக் காலத்தில் ஜைனர்கள் பெரிதும் அக்கறை காட்டி வந்திருக்கின்றனர். ஜைன அறவோர்கள் தவமியற்றிய குகைகளை அந்தக் காலத்-தில் அறவோர்ப் பள்ளிகள் என அழைத்தனர். அந்தப் பள்ளி-களில் இருந்த துறவோர்கள், அந்தந்தப் பிரதேச மொழியில் கல்வி கற்பித்தனர் இதனுல்தான் கல்வி போதிக்கும் இடத்-துக்குப் பள்ளி எனும் பெயர் வழங்கலாயிற்று. பெரிய புராணத்-தில் சமணர்களின் மடங்களை ''அருகர் மேவும் பள்ளிகள்'' என சேக்கிழார் குறிப்பிடுகிருர். இறைவனைத் தொழும் இடத்தையும் சமயக் கல்வி போதிக்கும் இடத்தையும் தமிழ் நாட்டிலுள்ள முஸ்லிம்கள் பள்ளி வாசல் என அழைக்கின்றனர்.

5) ஆடவரைப் போலவே, மகளிரும் துறவறத்தை மேற்-கொண்டு பொதுத் தொண்டு செய்திருக்கின்றனர். குழந்தைப் பருவத்திலிருந்தே தாய்மார்கள் குழந்தைகளுக்கு ஜைன சமய அறங்களைப் போதிப்பதற்கு ஜைன சமயக் குரத்திகள் விளங்கி இருக்கின்றனர்.

6) அபயம் என்று தஞ்சம் அடைந்தோரை காப்பது சமயக் கடமை எனக் கருதி தஞ்சம் அடைந்தோரைஜைனர்கள் காப்பாற்றி இருக்கின்றனர்.

7) உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் எனக் கருதி உணவு அளித்து, ஏழை மக்களை காப்பாற்றினர். அன்ன தானம், அவுடதானம், அபயதானம், சாத்திர தானம் இந்த நான்கையும் தவருது தொடர்ந்து செய்தார்கள்.

8) ஜைன முனிவர்கள் ஒழுக்கத்தாலும் தவத்தாலும் வழி காட்டி மக்களைத் திருத்தினர். அறங்களைப் போதிப்பதைக் காட்டிலும், அறங்களைக் கடைப் பிடிப்பதே மேலான ஒழுக்கம் என்று கடைப்பிடித்தனர்.

9) எந்த மதமும் அரசாங்கத்தின் துணையின்றி, ஆதர-வின்றி வளர்ந்தது இல்லை. ஜைனர்கள் கல்வி, தவம், ஒழுக்கத்-தால் மனம் கவர்ந்து அரசர்களின் ஆதரவு பெற்றனர்.

10) ஜைனர்கள் பிற மதங்களைப் பழித்துப் பேசியோ பிறர் மனம் நோகும்படி பேசியது இல்லை. பல துறைகளில் தன்னல மற்ற பணி புரிந்திருக்கிறார்கள்.

## ஜைன சித்தாந்தம்

ஜைன சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பின் வருமாறு கூறலாம்.

1) சுரங்கத்தில் இருக்கும் தங்கம் மண்ணுடன் கலந்து இருப்பதைப் போலவே, தொடக்க முதலே ஆன்மாவும் கர்மம் என்னும் மாசுகளோடு பின்னிப் பிணைந்து பிறக்கிறது.

2) ஒவ்வொரு ஆன்மாவும் கர்ம அணுக்களிலிருந்து விடு-பட்டுப் பூரண நிலையை அடைய முயல வேண்டும். புலன்களை-யும் மனத்தையும் கட்டுப்படுத்துவதில் ஆன்மா வெற்றி பெற்றால் பிறவிப் பெருங்கடலைக் கடந்து பேரானந்தம் பெறமுடியும்.

3) உலகம் தானே உண்டானது தவிரக் கடவுள் இந்த உலகத்தைப் படைக்கவில்லை. கடவுள் என ஒருவர் இல்லை. ஆனால் கடவுள் தன்மை என்பது உண்டு. ஆன்மா கன்ம மாசு-களிலிருந்து விடுபட்டால் அது கடவுள் தன்மையை அடையும். கடவுள் தன்மை பெற்ற ஆன்மாவால் அனைத்தையும் காண முடியும்; அறிய முடியும்; அளவற்ற ஆற்றலையும் பெற முடியும். அளவற்ற ஆனந்தத்திலும் திளைக்க முடியும் இந்த நிலையை அடைவதே முக்தி என்று ஜைனர் கூறுவர்.

## மும்மணிகள்

ஜைன சம்பிரதாயப்படி, ஆன்மா முக்தியை அடை-வதற்கு மூன்று பண்புகள் அவசியம் வேண்டும். அவற்றை நற் காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்று கூறுவார்கள்.

நற்காட்சி என்பது ஜைனசமயம் கூறும் அறு திரவியங்கள் ஒன்பது பதார்த்தங்கள் ஆகியவற்றைப் பரிபூரணமாக அறிவது. எந்த விதமான சந்தேகங்களுக்கு இடம் கொடாமலும் மூட நம்பிக்கைகளுக்கு இடங்கொடாமலும் இருப்பதே நற்காட்சியாகும்.

நற்காட்சி ஏற்பட்ட பின்னர், நல்ஞானத்தைப் பெற முயல வேண்டும். நல்ஞானத்தை ஐந்து துறைகளில் பெற முடியும் அவை:-

(1) மதி ஞானம் (புலன் அறிவு)

(2) சுருத ஞானம் (நூல் அறிவு)

(4) அவதிக் ஞானம் (வெகு தொலைவில் இருப்பவற்றை அறியும் ஆற்றல்)

(4) மனப் பரியை ஞானம் (பிறர் மனத்தில் இருப்பதை அறியும் ஆற்றல்)

(5) கேவல ஞானம் (முற்றிவு) என்பன.

(6) நல்லொழுக்கம் என்பது, மனம் வாக்குக் காயம் மூன்றையும் அதன் போக்கில் விடாமல் கட்டுப்படுத்தி நல்வழியில் செலுத்துவதாகும்.

இந்த மும்மணிகளில் ஏதேனும் ஒன்று குறைந்தாலும் ஆன்மா வீடுபேற்றை அடைய முடியாது என்பது ஜைனர்களின் நம்பிக்கையாகும்

# சைதன்ய மதம்

சைதனியர் வங்காள தேசத்தில் நவத்வீபத்தில் கிறிஸ் சகம் (1486) வது வருஷத்தில் விஷ்ணு அம்சத்தால் பிறந்தவர். தந்தை ஜகந்நாத மிச்ரன் தாய் சசீதேவி. இவரது முதற்பெயர் விச்வம்பரன். இவர் கிருஷ்ணனைப் போல் நீர்க்கு கங்காதீரம் வரும் பெண்களைச் சரசஞ் செய்து கொண்டும் தனக்கு வேண்டியவைகளை விரும்பிய வீட்டிற்கு சென்று களவாடியும் வருபவர். இச் தைனியர் கல்வி கேள்விகளில் வல்லவராய் லக்ஷ்மி தேவி என்பவளை முதல் விவாகஞ் செய்து கொண்டு சில நாளிருந்து பின்பு அவள் பரமபதம் அடையவும் விஷ்ணுப் பிரியை என்னும் ஒரு பெண்ணை இரண்டாவது மணஞ் செய்து கொண்டார். பின்னர் தந்தை இறக்க தந்தைக்கு சிரார்த்தம் செய்யும்படி கயா தீர்த்தத்திற்கு சென்ற போது, அவ்விடத்தில் ஈச்வரபுரி என்னும் யோகியைக் கண்டு அவரிடத்தில் உபதேசம் பெற்று சதாசாரத்துடன் கூடியிருந்து ஹரி பக்தியில் மேலிட்டார்.

# மதசித்தாந்தம்

இவர் முக்தி மார்க்கமே போதித்தார். கர்மத்தில் நம்பிக்கையில்லை. யக்ஞ, யாக ஹோமாதிகளால் பிரயோசனமில்லை எனவும் மோசமில்லா விசுவாசம் இடை விடா பக்தி என்பதே மோக்ஷம் எனவும் கூறியவர்.

சைதன்ய மதத்தின் முக்கிய கேந்திர ஸ்தானங்களாக மூன்று ஸ்தலங்கள் உருப்பெற்றன. கௌடீய வைஷ்ணவத்தின் முக்கிய ஸ்தலங்கள் இவை. வங்கத்தில் நவத்வீபம். ஒரிஸ்ஸாவில் புரி. மற்றும் உத்திரப் பிரதேசத்தில் பிருந்தாவனம் ஆகிய இம் மூன்று ஸ்தலங்களிலிருந்தும் சைதன்ய மதம், பிரசாரம் செய்யப்பெற்று பரவியது. சைதன்யரைப் பின்பற்றியவர்கள் தங்கிய இடங்களுக்கு ''ஸ்ரீ பாட்'' என்ற பெயரிட்டு சொல்லுவார்கள்.

சைதன்ய மதத்திற்கு மத்யகேந்திரம் ''நவத்வீபமேல, வைஷ்ணவத்தின் பல கிளைக்கேந்திரங்களாக நதியா ஜில்லா'' விலும், நவத்வீப நகரிலும், பாராகாச்சி, தோகாச்சி, மங்காச்சி, குலியா, பாஹாட்புர் சம்பஹாட்டி சாலிக்ராம் முதலிய கிராமங்களிலும் சைதன்யரின் பக்தர்கள் வசிதது வந்தனர். இந்தக் கிராமங்களையெல்லாம் வைஷ்ணவ ஸ்தலங்களாகக் குறிப்பிடுவது வழக்கம்.

சைதன்யருடைய மிகவும் புகழ்பெற்ற சிஷ்யர்களிலே ஒருவர் நித்தியரனந்தர். சைதன்யரின் வாழ்நாட்களில் வங்காளத்தின் கீழ்கண்ட பகுதிகள் பலவற்றிலும் வைஷ்ணவ மதம் பரவலாக இருந்தது. பின்னர் வைஷ்ணவ மதம் கிழக்கு வங்க மக்களிடையேயும் வெகுவாகப் பரவியது. அத்வைத ஆசாரியர், நித்தியானந்தர், கதாதரர், விஷ்ணுதாஸ கவீந்திரர் போன்ற சிஷ்யர்களும், அவர்களுடைய சிஷ்ய பரம்பரைகளும் இந்த பகுதிகளில் வைஷ்ணவப் பிரசாரம் செய்ததினுல் டாக்கா, இன்னும் கீழ்வங்கத்தில் பல வைஷ்ணவ ஸ்தலங்கள் தோன்றின.

ஸ்ரீ கிருஷ்ணனின் பிறந்த நாளைக் கொண்டாடும் ''ஜன்மாஷ்டமி'' என்னும் பெருவிழாவும், பெரிய, பெரிய கீர்த்தன, பஜன கோஷ்டிகள் கூடிப் பஜித்துக் கிருஷ்ணனை வழிபடும் முறையும் டாக்கா பகுதியில் காணும் வைஷ்ணவத்தின் வெகுஜன ரஞ்சகமான அம்சங்கள்.

சைதன்யரின் மதக் கொள்கைகள், இயக்கம் காரணமாக இலக்கியம், இசை, நாடகம் முதலியவற்றில் ஓர் ஆக்க சக்தி பெருகியது. சைதன்யர் ஊக்கி இயற்றப்பட்ட நூல்கள் ஆரம்பகாலத்தில் சமஸ்கிருத மொழியிலேயே இருந்தன. இதைப் பின்பற்றியே முராரி குப்தர் பிரபுவின் முதல் திவ்ய சரித்திரத்தை சமஸ்கிருதத்தில் எழுதிய நூலின் பெயர் ''சைதன்ய சரிதாம்ருதம்'' என்பது, காவிய ரூபத்தில் 78 பாடல்கள் உள்ளன. சைதன்ய மதம் தழைத்த காரணத்தினுல் தோன்றிய இரு துறைகளில், அதாவது கீதம், ஜீவியம் என்கிற இரண்டு இலக்கியத் துறைகளில் - முதலில் தோன்றி வளம் பெற்றது கீதம்தான். நாம சங்கீர்த்தனம் சைதன்யமத இயக்கத்திற்கு உறுதுணையாகவும் கீர்த்தனம் பாடுதல் மதச் சடங்காகவும் ஆகிவிட்டது. சைதன்ய மதம் என்ருல் கீர்த்தனையும் உண்டு என்று ஏற்பட்டுவிட்டது. பிருந்தாவன தாஸர் பாட்டுக்களைப் பாடுவதுமட்டுமின்றி லயம் தவருது கைகொட்டுவது பற்றியும் சொல்லித் தந்தவர். மேலும் கீர்த்தனம் சொல்லிக் கொண்டே கைகளைக் கொட்டித் தாளம் தவருமல் அவர்களை ஆடவும் சொல்லுவாராம். ஸங்கீர்த்தன பாணி முதலில் வீடு வீடாகவும், பின்னர் ஊர் ஊராகவும் பரவியது. ஸங்கீர்த்தனத்தில் உபயோகப் படுத்தப்படும் ''கோல்'' என்னும் தாள வாத்தியத்தையும் முதலில் ப்ரயோகிக்க ஆரம்பித்தது சைதன்யர்தான் என்று சொல்லப்படுகிறது. ''கோல்'' என்கிற வாத்தியம் ''பக்வாஜ்'' (மத்தளம்) போன்றது இது மண்ணினுல் செய்யப்பட்டது. இத்துடன் (கரதாளமும்) ஜால்ராவும் ஸங்கீர்த்தனத்திற்கான பின்னணி இசைக் கருவிகளாக வழக்கில் வந்தன.

வங்க வைஷ்ணவத்துக்கும், வங்க இசைக்கும் உள்ள தொடர்பு 12-ம் நூற்ருண்டிலேயே ஏற்பட்டது. பன்னிரண்டாம் நூற்ருண்டில் தான் ''ஜயதேவர்'' புகழ்பெற்ற கீத கோவிந்தத்தை வரைந்தார். பக்தி ததும்பும் ஜயதேவரின் அஷ்டபதிகள் சைதன்யரை வெகுவாய்க் கவர்ந்தன. இந்த விஷயத்தில் ராதாகிருஷ்ண மதச் சாயலைக் கொண்ட ஜயதேவரின் பதாவளிகள், சைதன்யர் பரப்பிய கௌடீய வைஷ்ணவத்தின் பக்திப் போக்கை வெகுவாய் ஊக்கியதெனலாம். கிருஷ்ண நாமத்தை மந்திரமாகக் கொண்டு திரும்பத் திரும்பச் சொல்லி நாமஸங்கீர்த்தனம் செய்யச் சொல்லுவார்'. இந்த நாம ஸங்கீர்த்தனத்தை மகாமந்திரமாக உச்சரிக்கச் சொல்லி; ஹரே கிருஷ்ண—ஹரே கிருஷ்ண—கிருஷ்ண கிருஷ்ண

ஹரே ஹரே; ஹரே ராம—ஹரே ராம—ராம ராம ஹரே ஹரே என்ற சந்தத்தில் பாடச் சொல்லுவார். சைதன்யர் சமஸ்க்ருதத்தில் ''சேதோதர்பண மார்ஜநம்'' என்று தொடங்கும் ''சிக்ஷாஷ்டகம்'' என்னும் எட்டுப் பாடல்களை இயற்றியதின் தமிழ் மொழி கருத்து :—

1. ஸ்ரீ கிருஷ்ணனின் திருப்புகழ் (ஸங்கீர்த்தனம்) நம் மனக்கண்ணாடியின் மாசினைத் துலக்க வல்லது; பவமெனும் (சம்சாரம்) பெருங்காட்டுத் தீயை அவிக்கக் கூடியது; அல்லி மலரை மலரச் செய்யும் தண்ணிய நிலாவைப் போல் நலமதைத் தருவது; கல்வியெனும் மணாட்டியைத் தரவல்லது; இன்ப மெனும் கடலைப் பொங்கச் செய்வது; ஒவ்வோர் அடியும் (சொல்லும்) பூரண அமுதச் சுவையை ஊட்ட வல்லது; ஆத்மாவையே நீராட்டிக் குளிரச் செய்ய வல்லது—இதற்கு வெற்றி!

2. இறைவன் பெயர்களை, கோவிந்தா முகுந்த, ஹரி என்று உச்சரிக்கக் காலம், நியமம் ஏதுமில்லை.

3. புல்லைக் காட்டிலும் தாழ்மை கொண்டிரு. மரத்தைப் போல் பொறுமையாக இரு. உன்னை ஒரு பொருட்டாக எண்ணிக் கொள்ளாதே. பிறரை மதித்திடு; ஹரி எப்பொழுதும் புகழப் பட வேண்டியவன்.

4. செல்வத்தையோ, உற்றாரையோ, அழகு மாதரையோ நற்கவிதையையோ நான் விரும்பவில்லை, ஏ உலக நாயகனே என்னுடைய பிறவிதோறும் இறைவனான உன் பால் நீங்காத பக்தி எனக்கு ஏற்பட வேண்டும்.

5. கோபநந்தன் மதலையே, கோரபவக்கடலில் சம்சார மூழ்கிய உன் அடிமையான என்னைக் கரையேற்றி உன் அடிக் கமலத்தின் ஒரு பொடித் துளியாக நினைத்து ஏற்றுக் கொள்வாய்.

6. உன் திருப்பெயரைச் சொல்லும் போது, கண்ணீர் பெருகவும் உணர்ச்சியால் வாய்மொழி குழறவும், உவகையால் உடல் சிலிர்க்கவும் அந்நாள் என்று வருமோ?

7. ராதையின் கூற்றாக கிருஷ்ணனை விட்டுப் பிரிந்ததால், எனக்கு ஒரு கணம் ஒரு ஊழி போல் நீள்கிறது; என்னுடைய கண்களில் நீர் மழையென இறங்குகிறது, இவ்வுலகமே வெறிச் சென்று ஆகி விடுகிறது.

8. ராதையின் கூற்ருக கண்ணன் என்னை அணைத்தாலும், அழிதகச் செய்யினும் எனது கண் வழியில் சிக்காமல் நழுவிச் சென்ருலும் வேறு மனையில் அக்கள்ளமாயன் (காதல்) விளையாட்டைப்புரிந்தாலும் அவனே என் நாயகன், என் உயிர், அணையன் வேறு எவனும் அல்லன்.

நாளடைவில் 19ம் நூற்ருண்டில் கீர்த்தன முறை மங்கத் தொடங்கியது. சைதன்ய மதமும் தன்னுடைய உயிரூட்டும் சக்தியைச் சிறிது சிறிதாக இழக்கத் தொடங்கியது.

# பௌத்த மதம்

இமயமலை அடிவாரத்திலுள்ள ''கபிலவத்து'' சிற்றூரில் சாக்கிய குலத்தில் ''கௌதம் குடும்பத்தைச் சேர்ந்த சுத்தோதனர் அரசர் ஆண்டு வந்த சுமார் கி. மு. ஆரும் நூற்ருண்டில் அரசர் சுத்தோதனருக்கும் அவருடைய மனைவி மாயா தேவிக்கும் கி. மு. 563–ல் பிறந்த ஆண் குழந்தைக்கு சித்தார்த்தர் என்று பெயர் சூட்டி வளர்த்து வந்த நாளில் நிமித்திகர் அரசனிடம் சித்தார்த்தர் பெரியவரானதும் துறவியாய் விடுவார் என்று சொல்ல, அரசன் அக்குழந்தைக்குத் துறவு பூணும் எண்ணங்கள் தோன்ருமலிருக்கும்படி, செல்வ போகத்தினுல், உலக வாழ்க்கையில் வெறுப்புத் தோன்ருதபடி இன்ப சுகங்களைக் காட்டி, பதினுருவது வயதில் ஓர் அரசிளங்குமரியை மணம் செய்து வைத்தார். சித்தார்த்தருக்கு சுமார் இருபத்தொன்பதாவது வயதில் இராகுலன் என்ற புத்திரன் பிறந்ததும் ஓர் நாள் சித்தார்த்தர் கனவில் நான்கு தடவை தேவதூதன் ஓர் வயோதிகராகவும், நோயாளியாயும், துறவியாயும், அழுகிய பிணமுமாகவும் காண நேரிட்டது. இக் காட்சிகளை எல்லாம் கண்ட சித்தார்த்தருக்கு மனித வாழ்க்கை துன்பத்தினுல் சூழப் பட்டது என்றும் துன்ப வாழ்க்கையிலிருந்து நீங்கி நிலைத்த இன்ப நெறியைக் கண்டு பிடித்து உலகத்தாரை உய்விக்க வேண்டும் என்றும் பேரவா உண்டாயிற்று. இதனுல் அன்றே நள்ளிரவில், அரசபோகம், மனைவி, மகனையும், தாய் தந்தையரையும் துறந்து காட்டிற்குள் சென்ருர். காட்டில் வழியில் ஆளார காலம என்பவரிடமும் பிறகு உத்தக ராமபுத்திர என்பவரிடம் சீடராக அமர்ந்ததாக வரலாறு.

இவ்விருவர் காட்டிய வழியும் மக்களை உய்விக்கும் நெறியல்ல–வென்று கண்டு, அவர்களை விட்டு ''உருவேல என்னும்

இடத்திற்கு சென்று உண்ணுவிரதம் பூண்டு கடுந்தபசில் ஈடு-பட்டார். இத்தருணத்தில் ஐந்து துறவிகள் இவரையடுத்து இவருடன் இருந்தார்கள்.

உணவு கொள்ளாமல் உடலை ஒடுக்கி கடும் தபஸ் புரிந்த தால் மயக்க முற்ற பிறகு தான் அளவுக்கு மிஞ்சி உடம்பை பட்டினியால் வாட்டுவது தவறு என்று உணர்ந்து ஊணவு கொண்டார். இதனைக் கண்ட இவருடன் இருந்த பிக்குகள் இவரை விட்டுப் போய் விட்டதால் போதி (அரச) மரத்தின் அடியில் அமர்ந்து தியானத்தில் இருந்த போது மெய்ஞான ஒளியைக் கண்ட சித்தார்த்தார் புத்தர் ஞானமாகிய போதிகை வரப்பெற்று, பிறவித் துன்பத் தைக் கடந்து பிறவாமையாகிய இன்ப நெறியைக் கண்டார். அவ்வமயம் அவருக்கு வயது முப்பத்தைந்து. பிறகு புத்தர் தம்மை விட்டுச் சென்ற ஐந்து பிக்குகளைத் தேடி அவர்களுக்குத் தாம் கண்ட உண்மைகளைப் போதித்தார். இவரது உபதேசங் களைக் கேட்டு இவருக்குச் சீடர் ஆனார்கள். இப்படியாக பல துறவிகள் இவருக்குச் சீடர் ஆயினர். அறுபது சீடர் ஆனதும் அவர்களை ஊரெங்கும் அனுப்பித் தமது ''பௌத்த மதத்தைப் போதிக்கச் செய்தார்.

துறவிகளாகிய பிக்குகளும், பிக்குணிகளும் ஒழுக வேண்டிய முறைகளை வகுத்து பிக்கு சங்கத்தை ஏற்படுத்தினர். இவருக்கு மாருக சிலர் கிளம்பி இவர் உண்டாக்கிய மதத்தில் பிளவு உண்டாக்க முயற்சித்தார்கள். ஆனுல் பிளவு ஏற்படாத படி செய்தார் புத்தர். புத்தரின் சீடர்களில் முக்கியமானவர்கள். சாரிபுத்திரர், மொக்கல்லானர் (மௌத்தல்யானர்) மகாகாசிபர், உபாலி, அநந்தர் மகத நாட்டரசன் பிம்பிசாரரும் கோசல நாட்டரசர் பசேனதி பிரசேனஜித் இவருடைய சீடராகயிருந்து மதத்தைப் பரப்புவதற்கு வேண்டிய உதவி செய்தார்கள்.

புத்தர் வாழ்ந்திருந்த காலத்தில் பல மதங்கள் இருந்தன. ஜைன மதத்தின் (நிகந்த நாதபுத்த) கடைசி தீர்த்தங்கரரான வர்த்தமான மகாவீரர் தலைவராக இருந்தார். கோசாலி மக்கலி என்பவர் உண்டாக்கிய ஆஜீவக மதமும் புத்தர் காலத்தில் செல் வாக்குப் பெற்றிருந்தது.

ஆஜீவக மதத்தை யுண்டாக்கிய மற்கலியும் புத்தர் காலத்தில் இருந்தவர். இவர்கள் ஆடையின்றி அம்மணமாகத் திரிந்தார்கள். புத்தர் பெருமான் அவரது எண்பதாவது

ஆண்டில் கி. மு. 483ல் குசி நகரத்தில் நிர்வாண மோக்ஷம் அடைந்தார் குசிநகரமக்கள் இவர் உடலுக்கு இறுதி கடமைகளைச் செய்தார்கள். எஞ்சிய இவரது உடம்பின் சாம்பலும் எலும்பும் எட்டுப் பகுதியாகப் பகுக்கப்பட்டு எட்டு ஊர்களில் புதைக்கப்பட்டு அவற்றின் மேல் சைத்தியாலயங்கள் கட்டப்பட்டன.

புத்தர் ஏற்படுத்திய பௌத்த வேதத்திற்கு திரிபிடகம் என்பது பெயர். பாலிமொழியில் தீபிடகம் என்று கூறப்படும். புத்தர் தமது கொள்கையைப் போதித்த போதிலும் அவர் அவைகளை நூல் வடிவமாக எழுதவில்லை. ஆனால் இவருடைய சிஷ்யர்கள் இரண்டு சம்ஹிதை தொகுப்புகளாகத் தொகுத்தது ''விநயம்'' என்பதும் தர்மம் அறிநெறி என்பதும். இவை பிக்குகளும், பிக்குனிகளும் ஒழுக வேண்டிய ஒழுக்கங்களைக் கூறுவது.

புத்தர் நிர்வாண மோக்ஷம் அடைந்த பிறகு, மகத நாட்டுத் தலைநகரமான ராஜகிருஹ நகரத்திற்கு சமீபம் ஸத்தபணி என்னும் மலைக்குகையிலே கார்காலத்தைக் கழிக்கும் பொருட்டு ஐந்நூறு தேரர்கள் (பிக்குகள்) கூடி பிக்ஷு சங்கத்தார் முதல் மகாநாடு நடத்தினார்கள். புத்தருடைய முக்கிய சீடர்களில் மகாகாசிபர் மகாநாட்டிற்குத் தலைமை தாங்கி புத்தர் அருளிய விநய போதனைகளை அவருடைய மற்றொரு முக்கிய சீடர் உபாலி ஓதினார். மற்றொரு சீடர் ஆநந்தர் தம்ம போதனைகளை ஓதினார். இந்த முதல் சங்கத்திலே ''விநயபிடகம்'' தம்ம அபிதம்மபிடகம் என்னும் இரண்டு பிடங்கள் மட்டும் தொகுக்கப்பட்டது.

சூத்திர பிடகம் என்னும் மூன்றுவது பிடகம் அபிதம்ம பிடகத்திலிருந்து பிற்காலந்தில் பிரித்துத் தொகுக்கப்பட்டது. ஆதியில் இரண்டு பிடகங்கள்தான் இருந்தவை. பிற்காலத்தில் மூன்று பிடகங்களாகத் தொகுக்கப்பட்டதால் ''திரி பிடகம்'' என்று பெயர் ஏற்பட்டது.

இம் மூன்று பிடகம் தொகுக்கப்பட்ட பிறகும் பிக்குகள் நாள்தோறும் ஓதி, பாராயணம் செய்து சீடர்களுக்குக் ற்பித்து வந்தனர். குருசிஷ்யர் வழிமுறையாக நெடுங்-காலம் ஓதப்பட்டு வந்தன. தவிர எழுதா மறையாகவே இருந்தன. இப்படி ஓதிய பிக்குகளில் விநய பிடகத்தை ஓதியவர்கள் விநயதரர் என்றும் சூத்திர பிடகத்தை ஓதி வந்தவர் சூத்ராந்திகர் என்றும், அபிதம்ம பிடகத்தை ஓதி வந்தவர் அபிதம்மிகர் என்றும் வழங்கலாயிற்று. நாளடைவில் இப்பிடகங்களை ஓதிய பிக்குகளில் பல உட்-பிரிவினரும் இருந்தனர்.

திரிபிடகங்களைப் பாராயணம் செய்து வந்த பிக்கு களுக்குப் 'பாணகர்' என்பது பெயர். பௌத்தமத உரை நூல்களில் ''தீக பாணகர்'' மஜ்ஜிம பாணகர்; சம்யுக்த பாணகர்; அங்குத்தர பாணகர்; ஜாதக பாணகர், தம்ம பதப் பாணகர் என்றும் உள்ளது.

## பௌத்த மதம் தத்துவம்

1) அவிஜ்ஜை; 2) ஸங்க்காரம்; 3) விஞ்ஞானம் 4) நாமரூபம் 5) ஷளாயதன 6) பஸ்ஸ 7) வேதன 8) தண்ஹா 9) உபாதானம் 10) பவம் 11) ஜாதி 12) ஜராமரணம். இப்பன்னிரு சார்புகளின் தன்மை களைச் சாத்தனார், மணிமேகலை 30 ஆம் காதையில் விளக்கியுள்ளார்.

பன்னிரெண்டு பாலி மொழிப் பெயர்களை சீத்தலைச் சாத்தனார் அவரது மணிமேகலையில் ஆளுகிறார். 1. பேதமை; 2. செய்கை; 3. உணர்வு; 4. அருவுரு 5. வாயில் 6. ஊறு 7. நுகர்வு 8. வேட்கை 9. பற்று 10. பவம்; 11. தோற்றம் 12. வினைப்பயன்.

''பேதமை செய்கை உணர்வே
அருவுரு வாயில் ஊறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்.

இற்றென வகுத்த இயல் பீரெறும்
பிறந்தோர் அறியில் பெரும்பேறு அறிகுவர்,
அறியார் ஆயின் ஆழ்நர கறிகுவர்.

மணிமேகலை.

(24 ஆம்: காதை 105-110-30 ஆம் காதை 45-50)

பௌத்த நூல்கள் ''மகாவம்சம், தீபவம்சம் என்னும் நூல்களிலிருந்து, பாடலீபுரம் என்னும் நகரத்தில் அசோக சக்கரவர்த்தியின் ஆதரவில் மொக்கல புத்த திஸ்ஸ என்னும் தேரரின் தலைமையில் மூன்ருவது பௌத்த மகாநாடு கூடியதென்றும், மகாநாடு முடிந்த பின்னர் பௌத்த மதத்தைப் பரப்புவதற்காகப் பல பிக்குகள் பல்வேறு நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர் என்றும் அறியப்படுகிறது.

தமிழ் நாட்டில் பௌத்த திருப்பதிகள் சிறப்புப் பெற்றிருந்த தென்ருலும் மலையாள நாட்டிலும் பல இடங்களில் புத்த விக்கிரங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

தமிழ் நாட்டில் காவிரிப்பூம்பட்டினம், பூதமங்கலம் சங்கமங்கலம் போதிமங்கலம் திருவிளந்துரைக் கோயில்; கும்பகோணம்; திருவலஞ்சுழி; பட்டிச்சுரம்; எலயனூர்; பொன்பற்றி; புத்தகுகு; உறையூர்; பெருஞ்சேரி; கோட்டப்பாடி; மயூரபட்டணம்; நாகைப்பட்டினம்; வெள்ளனூர்; செட்டிபட்டு; ஆலங்குடிபட்டி; காஞ்சிபுரம்; திருப்பாதிரிப்புலியூர்; ஆவூர்; கூவம்; ஞாயர்; நாவலூர்; திருச்சோபுரம்; மாங்காடு; இரண்டாங்காடு; மதுரை ஆகிய இவ்வூர்களில் பௌத்தப் பள்ளிகள் இருந்தன வென்று அறியப்படுகிறது.

அரிட்டா பட்டி; திருமாலிருஞ்சோலை (அழகர் மலை); தென்கரை; வஞ்சிமாநகர்; கீழைவளவு; முத்துப் பட்டி; நாகமலை; திருப்பரங்குன்றம் மேற்குபக்கத்திலுள்ள செங்குத்தான பாறையில் குகையுள்ளது. இதனுள் ஆறு

கற்படுக்கைகளும் பல ஆட்கள் தங்குமிடமும், கி. மு. 3 ஆம் நூற்றுண்டில் எழுதப்பட்ட பிராமி எழுத்து சாசனமும் உள்ளது. இம்மலையுச்சியில் உள்ள சிக்கந்தர் மசூதிக்கு மேற்கே சித்தர்மலை; விருச்சியூர்; குன்னக்குடி ஆனைமலை; வீரசிகாமணி; ஆறுநாட்டார் மலை; திருச்சிராப்பள்ளி; திருவாங்கூர் பக்கம், திருச்சாணத்துமலை; ஸ்ரீ முலேஸ்வரம் என்கிற ஊர்களில் பரவலாக கல்வெட்டுச் சாசனங்களும், புத்த விக்கிரங்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன.

# இஸ்லாம் மதம்

பிஸ்மில்லா ஹிர் ரஹ்மானிர் ரஹீம்
பிஸ்மில்லாவின் அர்த்தம் :–

மாறுத அருளும் பூரண அன்பும் நிறைந்த அல்லாஹ் (தஆலா) வை முன்னிட்டு இதனை ஆரம்பிக்கின்றேன்; இஸ்லாத்திற் சாரும் ஒவ்வொருவரும் ஆரம்பமாகக் கூறும் வாக்கியம். ''ஆமன்து–பில்லாஹி-வ-மலாயிக் கத்தி ஹி வகுத்து பிஹி-வ-ருசுலிஹி-வல்-யௌமில்-ஆகிரி-வல்-கத்ரி கைரிஹி-வ-ஷர்ரிஹி-மினல்லாஹி-த ஆலா–வல்–பஅது–ப. அதல்-மவுத்தி. இதன் அர்த்தம் :- அல்லாஹ்வையும், அமரர்களையும் வேதங்களையும், நபிகளையும், மறுமை நாளையும், இறந்தபின் உயிர் பெற்றெழும்புவதையும் உண்மையென உருகி கொண்டேன் என்பதாகும். எவர் முழு மனதுடன் இவ் வாக்கியத்தைச் சொல்லி விட்டாரோ அவர் இஸ்லாமிய மதத்திற் சேர்ந்து விட்டார்.

## இஸ்லாம் சர்வலோக மார்க்கம்

இஸ்லாம் என்றுல் சாந்தி சமாதானம் என்று பொருள் கூறுவர். அது ஒரு வகையில் சரிதான் என்றுலும் 'இஸ்லாம்' என்ற அரபுச் சொல்லுக்கு ('கீழ்ப்படிதல்' — வழிபடுதல் என்பதே சரியான பொருளாக அமைகின்றது.

இந்த அடிப்படையில் இஸ்லாம் மார்க்கம் உலக ளாவிய மார்க்கமாகத் திகழுகிறது.

இவ் வையகத்தில் எந்த வஸ்துதான் இறைவனுக்குக் கீழ்ப் படியாமல் இருக்கின்றது?

''வான மண்டலங்களில், பூமண்டலத்திலும் உள்ளவை யாவும் அவனுக்கே - அந்த ஏக இறைவனுக்கே - கீழ்ப்படிந்து நடக்கின்றன, என்று தெய்வத் திருமறையாம் திருக்குர்ஆன் கூறுகிறது. இவ் வசனத்தில் கீழ்ப்படிந்தன என்பதற்கு 'அஸ்லம் என்ற அரபிச்சொல் பிரயோகமாகிறது. அது இஸ்லாம் என்ற வினைச் சொல்லிலிருந்து பிறந்ததாகும்.

## திருகுர்ஆன் இறை வேதம்

இறைவனுடைய கட்டளைகள் என்பது குர் ஆனில் இடம் பெற்றுள்ளன. அந்தக் குர்ஆன் அல்லாஹ்வின் வேதம். அமரர்கோன் ஜீப்ரயீல் (அலை) அவர்கள் வாயிலாக இருபத்தி மூன்று வருடக் காலம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது அது அருளப்பட்டது. திருகுர் ஆன் ஒரு கருத்தைக் கூறுகிறதென்ருல் அதனைச் செயல்படுத்திட ஒரு சமுதாயம் முன் நிற்கிறது. 'அகீமுஸ்ஸலாத்' தொழுகையினை கடைப்பிடியுங்கள் என்பது குர்ஆனின் கட்டளை. இன்று உலகமெல்லாம் லட்சோபலட்ச முஸ்லிம்கள் இந்தக் கடமையினை ஐங் காலமும் செயல்படுத்திக் கொண்டிருக்கிருர்கள்.

இஸ்லாத்தின் கடமைகள் ஐந்து :—
முதலாவது கடமை :— கலிமா மூலமொழி
இரண்டாவது கடமை :— தொழுகை.
மூன்ருவது கடமை :— நோன்பு
நான்காவது கடமை :— சக்காத்
ஐந்தாவது கடமை :— ஹஜ்ஜு.

ஒவ்வொரு முஸ்லிம்களும் தங்களின் ஜீவியகாலம் முடிவு வரையில் அனுஷ்டிக்க வேண்டிய நிற்பந்த நடக்கையாகும்.

## இஸ்லாத்தின் கொள்கைகள் ஆறு :-

முதல் கொள்கை :— ''அல்லாஹ் – உண்டு
இரண்டாவது கொள்கை :— (மலக்குகள்) அமரர்கள் உண்டு
மூன்றுவது கொள்கை :— வேதங்கள் உண்டு
நான்காவது கொள்கை :— நபிமார்கள் உண்டு
ஐந்தாவது கொள்கை — மரணத்துக்குப் பின்னுள்ள வாழ்க்கை.
ஆறுவது கொள்கை — இறந்த பின் உயிர் பெற்றெழும்புவது.

இஸ்லாத்தின் உன்னதக் கோட்பாடு இரண்டு மூலக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பட்டிருக்கிறது முதலாவது லா இலாஹ இல்லல்லாஹு வென்ற தவ்ஹீது. அதாவது வழிபாட்டிற்குரியவன். சுயம் பிரகாசப் பரம் பொருளாகிய ஆண்டவனைத் தவிர வேறும் ஒன்றும் இல்லை என்பது. எனவே தெய்வத்துக்கு நிகராய் பிறிதொன்றைக் கருதி விக்ரக ஆராதனை செய்தலும் பல தெய்வ வணக்கம் புரிவதும் தப்பிதமானதும் அசத்தியமானதுமான கொள்கைகளாம்.

இரண்டாவது, ''முஹம்மது ரஸூலுல் லாஹ்'' அதாவது முஹம்மத் ஸல்லல்லா. ஹூஅலைஹி வசல்லமவர்கள் இறைவனின் திருத்தூதராவர் எனக் கொள்ளுதலாம்.

### மானிடர் இறைவனுகார்

கிறிஸ்தவர்களும் யூதர்களும் தங்கள் சமுகத்திற்குச் சீர்திருத்தக்காரர்களாகவும் வழி காட்டிகளாகவும் அனுப்பப்பட்ட நபிமார்களை இறைவனின் புதல்வர்களாக ஆக்கிக் கொண்டது போல் சத்தியமார்க்கமாகிய தீனுல் இஸ்லாம் தன் சமுகத்திற்கு அனுப்பப்பட்ட இறுதி நபியாகிய முஹம்மத் (ஸல்) அவர்களை இறைவனின் புதல்வராக ஆக்கிக் கொள்ளவில்லை; எனினும் அம்மகான்

இறைவனின் அடிமை என்றும் திருத்தூதரென்றும் பகருகிறது. இதுவே மிகவும் உன்னதமான கொள்கையாகும் இக்கொள்கை தான் பண்டைய வேதங்கள் ஓதிய கொள்கையாகும். இறைவன் ஒருவனே அவனே பெரியவன். மானிடர் யாவரும் சம சகோதரராவர்.

இஸ்லாம் மதம் சில பேதங்களையும் பல வகுப்புகளையு முடையதாயிருப்பதோடு, இவர்கள் தெய்வம் அல்லாவென்னும் பெயரோடு நாமரூப கிரியாதி குணரகிதனுய் வேறின்றி ஏகனுயிருப்பது, அந்த அல்லாவானவர், தன்னிடத்தில் ஒருவொளியை யுண்டாக்கி அதில் அல்லாவானவர் புகுந்து பாதியொளியில் மகமதியரை யுண்டாக்கி, மற்றப்பாதி யொளியில் எண்ணிறந்த உயிர்களை யுண்டாக்கி பின்பு நாயகன் அந்த வுயிரைப் பார்த்தவுடனே பாதாதி கேசபரியந்தம் வெயர்வை வர அந்த வெயர்வையில் முதற்பாகத்தை அம்பியா அவுலியாக்களுயிரை வகுத்து அதிற் சில வெயர்வையில் மசாகுளோக்குயிர் வகுத்து இப்படியாக உலக சிருஷ்டி செய்ததாகவும், கடைசியில் துளி வெயர்வையிருந்து அதிலொரு மாணிக்க முண்டாக்கி, அதை நாயகன் எதிராகப் பார்த்தபோது அந்த மாணிக்கம், அக்கினியாயும்; ஜலமாயும் பிரிவுபட்டு நின்று மீண்டும் ஒன்ருய் கூடிவெந்து கொதித்ததில் எழுந்த புகையினுல் விண்ணுலகமேழதட்டு முரியடுக்கு போல் படைத்து, பின்பு அந்த மணியொளியாகிற கனல் பரந்த மேகத்தாற் சந்திர சூரிய நக்ஷத்திரங்களைப் படைத்து பின்பு தேவலோக மேழும் உரியடுக்கு போல் உலகம் படைத்ததாகவும் அவர்களுடைய சித்தாந்தம்.

கருத்தனுல் கூறிய வேதமே முதல் வேதம்.

தவிரேத்து மூசாநபி பைகம்பரோதினது இரண்டாம் வேதம். இஞ்சில் இதை யீசாநபி யோதினது மூன்ரும் வேதம்.

ஜபூர் காதர் பூதுநபி யோதினது நாலாம் வேதம். இந்நால்வேதம் இந்நால்வர்களால் தம்பிரான் உண்டாக்கினது.

முஹம்மது நபி (ஸல்) அவர்கள் இறைவனின் கட்டளைகளை மக்களுக்கு போதித்த சமயம், பலர் வசை மாரி பொழிந்தார்கள், நகைத்தார்கள், மந்திரவாதி, பித்தன், பைத்தியக்காரன் என்றெல்லாம் சொல்லி எல்லாவித இடைஞ்சல்களும் கொடுந்து இறை வணக்கம் செய்ய விடாமல் தடுத்தார்கள். மக்காவை விட்டுத் துரத்தினார்கள்.

முஹம்மது நபி (ஸல்) அவர்களும் அவரைப் பின்பற்றியவர்களும் மதினா சென்றார்கள். இதிலிருந்துதான் இஸ்லாமிய ஆண்டு ''ஹிஜ்ரி'' கணக்கிடப்படுகிறது.

மதினா சென்றும் எதிர்த்தார்கள். முஹம்மது நபி (ஸல்) அவர்களும் அவர்களைப் பின்பற்றிய ஸஹாபாக்களும் இன்னல்கள் தொடர்ந்து வந்திடினும் சிறிதும் மனம் தளராது இறை நம்பிக்கை கொண்டு விடா முயற்சியால் பல அறப்போர்கள் நடத்தினார்கள். அவற்றுள் முக்கியமானவை ''பத்லுப்போர்'' ''உஹதுப்போர்'' ''அகழ்போர்'' போன்ற கடும்போர் செய்து கி. பி. 630 ஜனவரி 29ம் நாள் மக்கா மாநகரை வென்றார்கள்.

பொய்மை அழிந்தது; மெய்மை பொலிவுற்று விளங்கியது. நாட்டில் நீதி நிலவியது; அமைதியின்மை, அஞ்ஞானம் யாவும் மறைந்தன. பல நூற்றாண்டுகளாகப் பகைமை பூண்டிருந்த அரபு மக்களுக்குள், சகோதர உணர்ச்சிகள் வளர்ந்தன. மக்கள் திரள், திரளாக வந்து இஸ்லாத்தையும் இறை தூதரையும் ஏற்றனர். இவ்வாறாக இஸ்லாம் வளர்பிறை போல் வளர்ந்து விட்டது.

1448 ஆண்டுகளுக்கு முன் – அதாவது கி. பி. 571-ம் ஆண்டில் அரோபியாவின் தலைநகரான திரு மக்கா நகரில் தோன்றிய இறைத் தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் இறுதித்தூதராக உலகில் தோன்றினர். அவர்கள் 63 ஆண்டுகள் வாழ்ந்தனர். 40-ம் வயதில் அவர்களுக்கு 'இறைத் தூதர்' என்ற நபி பட்டத்தைச் சூட்டி ஜீப்ரயில் என்ற வானவர் சிறப்பித் தார். அன்று முதல் 23 ஆண்டுகள் 'குர்ஆன்' என்ற அல்லாஹ்வின் வேதம் அவர்களுக்கு இறக்கி அருளப் பட்டது. இவ்வேதம் 6666 வாக்கியங்கள் 114 அத்தியா யங்கள்–30 பாகங்கள் கொண்டது.

குர்ஆன் வரிவடிவாக இருக்கிறது. அதன்செயலுரு வாக முஹம்மதுநபி (ஸல்) அவர்கள் திகழ்ந்தார்கள். அவர்கள் மனிதர்கள் அனைவருக்கும் இறைவனின் தூத ராகத் தோன்றியதால் அவர்கள் செயல் முறைகள் அனைத்தும் அனைவருக்கும் வழி காட்டியாக இருந்தது.

உலகத்தில் தோன்றிய இறைத் தூதர்களின் வாழ்க்கை வரலாறுகளை அவர்கள் போதித்த போதனை களை திருகுர்ஆனில் தான் தெளிவாகப் பார்க்க முடியும். திருகுர்ஆனுக்கு தமிழில் தெளிவான விளக்க உரைகள் 'அன்வாறுல் குர்ஆன்' என்ற பெயரில் பல பாகங்கள் வெளிவந்திருக்கின்றன. நபிகள் நாயகம் (ஸல்) அவர் களின் சரித்திரத்தை அழகுபட ஆதாரத்தோடு விளக் கும் 'திருநபிசரித்திரம்' நபிகள் நாயகத்தின் பொன்னுன வாக்குகள் நிகழச்சிகள் 6000 வாக்கியங்கள் தொகுக்கப் பெற்ற சிறந்த ஆதார பூர்வமான நூல் 'அல்ஹதீஸ்' (மூன்றுபாகம்) மற்றும் 'இஸ்லாமியக் கொள்கை விளக் கம் என்ற நூல் உள்ளது. கடைசியாக ஈசா நபி (அலை) அவர்கள் 'இறைவன் ஒருவன்' என்று தான் போதித் தார்கள். அவர்கள் தங்களை கர்த்தா என்றோ, கர்த்தரின் புத்திரன் என்றோ கருதும்படி எப்பொழுதும் கூறவே இல்லை என்பதாக 'திருகுர்ஆன்' தெளிவுபடுத்துகிறது.

பெண்கள் ஆண்களின் ஆடையாக இருக்கிறார்கள் மேலும் ஆண்கள் பெண்களின் ஆடையாக இருக்கிறார் கள் என்பது 'திருகுர்ஆன்' வசனம். ஆடையானது எவ்வாறு உடலை அலங்கரித்து வெட்கத்தை மறைத்து, உயர்வு தருகின்றதோ அதைப் போன்று உலகில் ஆண் பாலரும் பெண்பாலரும் ஒருவருக்கொருவர் இறை நெறி யில் இறை விசுவாசத்தில் நற்செயல்கள் நிறைந்த வாழ்க்கையில் உதவி செய்ய வேண்டும்.

'உலகம் ஒரு பெருஞ் செல்வம். மேலும் அதில் எல்லாவற்றிலும் மேலான பொருள் நல்ல பெண்ணே' என்பது பெருமானாரின் பொன் மொழி. நல்ல இல்லாள் இருக்கும் இல்லமே பூலோக சொர்க்கமாகும்.

இஸ்லாமிய வரலாற்றிலே வேறு மதங்களில் இல் லாத ஒரு சிறப்பு இஸ்லாத்தில் ஆண்களைப் போன்று பெண்களும் ஒவ்வொரு வாழ்க்கைத் துறையிலும் உயர்வு பெற்று விளங்கியுள்ளார்கள். அவர்களில் 'ஹஸ்ரத் கதீஜத்துல் குப்ரா (ரலி) ஹஸ்ரத் ஆயிஷாஸித்திகா (ரலி)

ஹஸ்ரத் பாத்திமா (ரலி) ஹஸ்ரத் ஸுமைய்யா (ரலி) ஹஸ்ரத் அஸ்மா (ரலி) ஹஸ்ரத் ஸ்வதா (ரலி) ஹஸ்ரத் ஹன்ஸலாவின் மனைவி; நபிநேசமாது; ஹஸ்ரத் அபூதர் (ரலி) மனைவி ஹஸ்ரத் உம் முஸ்லிம் ஆகிய பத்து முஸ்லிம் மாதர்களின் வாழ்க்கை வரலாறு கள் உள்ளது.

## கஃபா பள்ளி

தொழுமிடம் மக்கா நகரிலுள்ள கஃபா பள்ளி. மனிதனுக்குத் தெய்வ உணர்ச்சி உண்டானதும், வ அன் ஆண்டவனைத் தொழுவதற்கு முதன் முதலாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட இடம் அது. அது அவ்வளவு தொன்மை யானதும் பரிசுத்தமானதுமான இடம். ஐந்து கண்டங் களிலும் உள்ள மக்கள் அனைவரும் ஆண்டுதோறும் அங்கு வந்து ஒன்று கூடுகிறார்கள். ஒரே நேரத்தில் ஓதுச் செய்வது. ஒரே நேரத்தில் தொழுகை ஒரே ஒலி ''அல்லாஹும்ம லப்பைக் [கைதட்டல்]'' ஆண்டவனே உமது முன்னிலையில் நிற்கிறோம்,'' என்ற ஒரே ஒலி. இக் கண்கொள்ளாக் காட்சியை உலகத்தில் வேறு எந்த

நாட்டிலும், எந்த இடத்திலும் மக்கள் காண இயலாது. இதனால் நல்லறிஞர்கள் பலர் இதைச் ''சமத்துவம்'' விளைவிக்கும் ''ஒரு பெருஞ்சந்தை'' என்று சொல்லியிருக்கிறார்கள்.

எல்லோரும், இஸ்லாமியர் எல்லாம் மேற்கு நோக்கித் தொழுகிறார்கள் என்று நினைக்கிறார்கள். அது தான் இல்லை. இந்தியாவில் உள்ளவர்கள் எல்லாம் மேற்கு நோக்கித் தொழுகிறார்கள். துருக்கியில் இருக்கிறவர்களெல்லாம் தெற்கு நோக்கித் தொழுகிறார்கள்; தென் ஆப்பிரிகாவில் உள்ளவர்கள் எல்லாம் வடக்கு நோக்கித் தொழுகிறார்கள்; வட ஆப்பிரிகாவில் இருக்கிறவர்கள் எல்லாம் கிழக்கு நோக்கித் தொழுகிறார்கள். இப்படி உலகம் முழுதும் உள்ள மக்கள் இம் மாதிரித் தொழுகிறார்கள் என்றால் உலகத்தின் ஐந்து கண்டத்தில் உள்ள இஸ்லாமிய மக்கள் அனைவரும் அந்த ஒரே புண்ணியத் தலத்தை நோக்கியே தொழுகிறார்கள் என்பது பொருள். இந்தியாவிற்கு அது மேற்கே இருப்பதால் மேற்கு நோக்கித் தொழுகிறார்கள்.

தினமும் இறைவனை அனைவரும் ஐந்துவேளை தொழ வேண்டும். தனித்துத் தொழுவதைவிட பள்ளி வாயலுக்குச் சென்று (மற்றவர்களுடன் சேர்ந்து) தொழுவதானது, 27 மடங்கு மேலானது. நாயகம் அவர்கள் 1400 ஆண்டுகளுக்கு முன்பே பள்ளிவாசல் களுக்குக் கதவுகள் இல்லாமல் எல்லோருக்கும் திறந்து வைக்கச் செய்திருக்கிறார்கள். இதிலிருந்து ஆலயப் பிரவேசச் சட்டம் என்பதற்கு இடமேயில்லை. என்று விளங்கவில்லையா?

## ஐந்தெழுத்து

''அல்லாஹு'' என்ற சொல்லில் உள்ள எழுத்துக்கள் ஐந்தாகும் அவை; 1) அலிப் 2) லாம் 3) லாம் 4) அலிப் 5) ஹெ என்பனவாகும்.

இவற்றில் முதல் எழுத்தான அலிப் என்பதை நீக்கிவிட்டால், மீதி எழுத்துக்கள் சேர்ந்து ''லில்லாஹி'' வணங்குதற்குரியவன் அல்லாஹ்வே-என்று அமையும்.

இரண்டாம் எழுத்தான ''லாம் என்பதையும்

நீக்கிவிட்டால், மீதி எழுத்துக்கள் சேர்ந்து, லஹூ வணங்கத்தக்க தகுதியுள்ளவன் இறைவன் என்றே அமையும்.

மூன்றும், நான்காம் எழுத்துக்களையும் நீக்கி விட்டால், மீதி எழுத்தான ஹெ "ஹூ" என்ருகி, அதே வணங்கத் தகுந்தவன் அல்லாஹ் - என்ற பொருளையே தரும். இவ்வாருக, அல்லாஹ்வை எப்படிப் பிரித்தாலும், பொருள் சிதைந்து வீணுகாமல், இறைவனையே சார்ந்த சொல்லாக அமைகிறது.

# சீக்கிய மதம்

## இறைவன்

ஓங்கார, ஸதிநாமு, கர்தா புருக்க. நிரபஉ, நிரவைரு, அகால முரதி அஜூநீ, ஸைபங்க, குருப்ர ஸாதி. (பொருள்) பரம தத்துவத்தின் திருவாசகம் "ஓம்" எனும் பிரணவ மந்திரம். அது ஒன்றே. அது சத்தியம், நித்தியம், அது இறைவனின் சொரூபம். அது படைப்பின் சிறப்பி, படைப்பிலே பரந்துளது. அது பயமற்றது. எவரிடமும் பகைமையற்றது, அதன் நிலை காலத்தின் செல்வாக்கிலிருந்து விடுபட்டது, அதற்குப் பிறவி கிடையாது. அது சமயம் பிரகாசம், அதுவே இறைவன். அந்த இறைவனை குருவின் அருளால் பெற முடியும்.

(மூலமந்திரம், ஜபு :)

பாரத தேசத்தில் தோன்றிய முக்கியமான மூன்று சமயங்களுள் ஒன்ருகிய "சீக்கிய" சமயம் தோன்றி ஏறக்குறையை ஐந்நூறு ஆண்டுகள் கடந்து விட்டது.

பக்தி இயக்கம் முதன் முதல் தோன்றியது தமிழ் நாட்டில் தான், அதைப் பஞ்சாப் நாட்டில் பரப்பியவர் "குருநானக் தேவர்".

பாஞ் + ஆப். இங்கு ஐந்து நதிகள், ஜெலம், சீனுப், ரவி, பியாஸ், சட்லட்ஜ் பாய்வதால் பஞ்சாப் என வழங்கி வருகிறது. மகாபாரத பாண்டவர்களின் மனைவியான "திரௌபதி" இந்தப் பிரதேசத்தில் பிறந்தவள். பாஞ்சால நாட்டை ஆண்ட அரசன் புதல்வி பாஞ்சாலி என அழைக்கப்பட்டாள். ஸமஸ்-

கிருத மொழிக்கு ஒப்பற்ற வகையில் செப்பமான இலக்கணம் வகுத்த பாணினி இந்நிலப் பகுதியில் தோன்றியவர். வேத மந்திரங்கள் முதல் முதலில் இப் பகுதியில் தான் ஒலித்தன. சரித்திரப் புகழ்பெற்ற தக்ஷசிலா கல்வி நிலையம் பஞ்சாப் பிரதேசத்தைச் சேர்ந்தது. பத்தாம் நூற்றுண்டில் காபூல் பள்ளத் தாக்கிலிருந்து விரட்டப்பட்ட பிராமண அரசர்களின் தலைநகர் என்ற முறையில் லாகூர் பிரசித்தி அடையும் வரைதல் வந்தி-யைச் சுற்றிலுமுள்ள பிரதேசம் பஞ்சாபில் முக்கியத்துவம் வாய்ந்த பகுதியாக விளங்கியது. இம் மாவட்டத்தைச் சேர்ந்த ''சகலா'' ககரம் பகிக்கர் அல்லது மாத்திரர் எனும் பஞ்சாப் வாழ் மக்களின் தலைநகர் என மகாபாரதத்தில் சொல்லப் பட்டுள்ளது.

1488-1517ல் சிக்கந்தர் மதவெறி கொண்டவர். இஸ்-லாமிய சமயமே சிறந்த சமயம் என்ற நம்பிக்கையில் பிற சமயத்தவர் மீது வாள் கொண்டும், கோல் கொண்டும் இஸ்லாமை திணித்தவர் தாய்மொழியையும்; ஸம்ஸ்கிருத மொழியையும், புறக்கணித்து அரபு மொழியையும்; பாரசீக மொழியையும் கற்றனர். ஆட்சியாளர்களிடமிருந்து சலுகைகளையும், பதவிகளையும் பெறும் பொருட்டு, தத்தம் முன்னோரின் சமயத்தைத் துறந்து இஸ்லாமிய சமயத்தைத் தழுவினரில், ரஜபுத்திர இனத்தில் பட்டி என்னும் பிரிவைச் சேர்ந்த ராய்போதால் வண்டி என்னும் சிற்றூருக்கும் மற்றும் சுற்று வட்டாரத்தில் பத்துப் பன்னிரண்டு கிராமங்களுக்கும், இவர் அதிபதியாய் விளங்கி இவர் காலமான பிறகு அவருடய புதல்வர் ராயபூலர் அதிபதியானுர். ராயல்பூரிடம் க்ஷத்திரிய குலத்தில் உதித்த மேந்தா கல்யாணதாஸ் என்கிற காலு என்று அழைக்கப்பட்டு வந்தவர் தலைமை கணக்குப் பிள்ளையாகப் பணிபுரிந்தார்.

> இந்த கல்யாண்தாஸ் ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் புதல்வர் குசன் பரம்பரையில் பிறந்தவர் என்று சரித்திர ஆசிரியர்கள் சிலர் குறிப்பிட்டு இருக்கிருர்கள்.

காலு என்கிற கல்யாணதாஸ் தம் மனைவி திரிபதாவுடன் இல்லறம் நடத்தி வந்த இவர்களுக்கு முதலில் ஓர் பெண் குழந்தை பிறந்தது. தாய் வழிப் பாட்ட வீட்டில் பிறக்கும் பெண் குழந்தைக்கு நானக்கி என்றும் ஆண் குழந்தைக்கு நானக் என்றும் பெயர் சூட்டுவது பஞ்சாப் நாட்டு மரபு. அதுபோல் பெண்ணுக்கு நானக்கி என்று பெயர் சூட்டி வளர்ந்து வரும்

போது, இவனுடைய ஐந்தாவது பிராயத்தில் 1469ம் ஆண்டு ஏப்ரல் மாதம் பதினைந்தாம் நாள் புலர் காலைப் பொழுதில் கலுவின் தம்பதிகளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. மருத்தவம் பார்த்த தௌல்த்தான் என்கிற முஸ்லிம் மாது குழந்தை பிறந்ததும் அழவே இல்லை என்றும் மகிழ்ச்சியோடு உரக்க சிரித்ததாகவும் ஓர் ஒளி வீசியதாகவும் எல்லோரிடமும் சொன்னதாக வரலாறு.

மறுநாள் குடும்ப ஜோதிடர் பண்டிதர் ஸ்ரீ ஹரிதயாள் குழந்தையைப் பார்த்து ஜாதக நாமகரணம் செய்து வைத்து குழந்தையை வணங்கி இந்தக் குழந்தையை முஸ்லிம்களும் ஹிந்துக்களும் மனமாரத் துதிப்பார்கள் என்று கூறினாராம். குருநானக் பிறந்த ஊர் தற்சமயம் பாக்கிஸ்தானில் உள்ளது.

அந்த இடத்தில் குருத்வார (சீக்கியர் கோவில்) ஜன்மஸ்தான் என்று மரியாதையோடு குறிப்பிடுகிறார்கள். அந்த இடம் நானக்கானு என்று அழைக்கப்படுகிறது.

நானக் குழந்தைப் பருவத்திலிருந்தே இறை நினைப்பில் ஆழ்ந்திருந்ததாகத் தெரிகிறது. ஏழாவது வயதில் பள்ளியில் சேர்ந்ததும் அகரவரிசையைக் கற்றுக்கொண்டதும் அகரத்தை முதல் எழுத்தாகவும் பிறகு உள்ள எழுத்துக்களை வரிசைப்படி முதல் எழுத்தாகவும் வைத்து இறைவனைத் துதித்து இயற்றிய ஒரு பாடலை இப்பொழுது ,,ஆசர்'' என்னும் ராகத்தில் அமைத்துப் பாடி வருகிறார்கள்.

பள்ளிப் படிப்புகளில் திறமை பெற்றிருப்பதைக் காட்டிலும், தெய்வீகப் படிப்பில் திறமைசாலியாக இருப்பதே சிறப்பு என்று ஆசிரியரிடம் தெரிவித்து தெய்வீகப் படிப்பு எது என்பதை விளக்கி ஸ்ரீராகத்தில் ஓர் கவிதை இயற்றியது

''நானக் ஜீ அ உபாஇகை லிக்கீ
நாவை தரமு பஹாலி ஆ
ஒத்தை ஸசோ ஹீஸசி நிபடை சுணி-
வக்கி கடை ஜஜமாலி ஆ
த்தா உந பாஇநி கூடி ஆர முஹ
கால்ஹை ஹ தோஜகி சாலி ஆ
தேரை நாஇ ரதே ஸே ஜீணி கஏ
ஹாரி கஏஸி ட்டகண வாலி ஆ
லக்கி நாவை தரமு பஹாலி ஆ. உ.

(வார அஸா படபி 2; 3; 12)

வெகு சிலருக்கு பாஷை புரியாததால் முதல் அடிகள் மாத்திரம் எழுதி கருத்து பூராவும் எழுதியுள்ளேன்.

இறைவன் ஜீவனைப் பிறபித்து, அதன் செயல்களைக் கணிக்கத் தருமத்தை (அறத்தினை நிலை நாட்டினார். அவரது பேரவையில் சத்தியத்தின் அடிப்படையில் தீர்ப்பு வழங்கப் படுகிறது.

தீயவர்கள் ஒதுக்கப்படுகிறார்கள். தீய தவறு செய் பவர்களுக்கு அங்கு இடமில்லை. அவர்கள் நரகம் புகுகிறார் கள். இறைவன் திருநாமத்தைச் சிந்திப்பவர், விரும்புபவர் மேன்மை பெறுகிறார்கள். போலியாகத் திரிபவர் தாழ்ச்சி பெறுகிறார்கள். தன்கர்மாக்களின் பலனை அநுபவித்து விட்டு உடல் மண்ணோடு கலந்துவிட்டது. ஆத்மா பிரிந்தது. உலகியலில் ஈடுபாடு கொண்டவன் மரித்தால், அவன் கழுத்தில் பாசபந்தமெனும் சங்கிலியைப் பிணைத்து முன்னே கொண்டு போகிறார்கள். நற்செயல் புரிபவன் புகழ் பெறுகிறான். மனித னுக்கு அவன் செயல்களின் பலாபலன்கள் அறிவிக்கப்படு கின்றன. செய்த குற்றத்திற்குத் தண்டனை அனுபவித்துத் தான் ஆகவேண்டும்; தப்பிவிடமுடியாது. தண்டனை அனு பவிப்பவனின் கூக்குரலை எவரே கேட்பர்? குருட்டு மனம் வாழ்வை வீணாக்கிக் கொண்டது. படித்த மனிதனானாலும் செய்யும் குற்றத்திற்கு உரிய தண்டனையை அவன்தான் அநுபவிக்கவேண்டும். படியாத எளியவன் அவனுக்காகத் தண்டனை பெறமாட்டான். அவனவன் செயல்களுக்கேற்பப் பெயரெடுக்கிறான். வாழ்க்கையைச் செம்மையாக நடத்தி இறைவன் முன்னிலையில் தலைக்குனிவு ஆகாவண்ணம் வாழ். படித்தவர், படியாதவரின் கருத்துக்களே ஆராயப்படுகின்றன. தான் தோன்றியாக நெறி பிறழந்து வாழ்பவர் தண்டனைப் பெறுவர். இந்தப் பாடலைக்கேட்ட ஆசிரியர் கருத்துக்களை உணர்ந்து வியப்படைந்தாராம். இதன் பின்னர் நானக் பள்ளிக்குப் படிக்கப் போகவில்லை. தகப்பனார் நானக்கின் சிந்தை மாறியதைக் கண்டு மீண்டும் மகனைப் பரம்பரை வித்தையில் பயில பண்டைச் சித்தாந்தங்களில் வல்லவராக விளங்கிய பண்டிட் ''பிரிஜ்நாத்'' சாஸ்திரியிடம் வடமொழி சிறிது காலம் பயின்று, பிறகு குதுப்உத்தின் என்னும் முஸ்லீம் மௌல்வி நடத்திய பாரசீக அராபிய மொழிகளைப் பயின்று ஆன்மீக உள்ளுணர்வினால் தூண்டப்பட்டு ஆலிஃப் முதல் தொடங்கும் பாரசீக வரிவடிவ எழுத்துக்களில் மற்றொரு கரந்துறைப் பாட்டையும் நானக் இயற்றியதாகச் சொல்லப் படுகிறது.

ஒவ்வொரு மதத்திலும், தத்துவம் உண்டு; சடங்கு உண்டு; சம்பிரதாயம் உண்டு; வேடம் உண்டு; அற்புதங்கள் உண்டு, இந்த ஐந்தும் இல்லாத மதமே இல்லை.

நானக்கின் பள்ளி வாழ்க்கையின் போது அவனுடைய சகோதரியின் பதின்மூன்ருவது வயதில் திருமணம் நடந்த தாக வரலாறுள்ளது.

நானக் பதினெரு வயதை அடைந்தபோது அந்நாளைய முறைப்படி "புரிநூல்" பூணூல் சடங்கு செய்ய அவனுடைய தகப்பனுர் காலு ஏற்பாடு செய்தார். பண்டிட் அரிதயாஸ் பூணலை அணிவிக்க முனைந்தபோது நானக் பண்டிதரை நோக்கி இச்சின்னம் எதற்காக அணியவேண்டும்? இத்தகைய சின்னங்கள் மூலம் எவ்வாறு மனிதரை வேற்றுமைப் படுத்த இயலும்' அவர்களது செயல்களே அவர்களை வகைப் படுத்துகின்றன" என்ற புரிநூலை அணிய மறுத்து விட்டாராம் பண்டிதரை நோக்கி ஓர் கவிபாடினுர். (குருகிரந்தம் அசா பக் 471) அதன் தமிழ்மொழி பெயர்ப்பு :

"இரக்கமே உனக்கு பஞ்சாயிடுக; நிறை எனும் இழை யுற இதனை நீ நூற்றிடு; உண்மையாம் முறுக்கினை ஏற்றிடு, பிரமசரியம் என்றுரைதரும் முடிச்சுகள் போட்டிடு; இன்னணம் உயிர்க் கொரு - பூணூல் இயற்றிடு. அத்தகை ஒன்றுளதேல் அதை எனக்கணிவி; இத்தகை இழை; அறல் இல்லை; மாசேரு (து) இதை எரிக் கொண்ணு(து) இழக்க ஒண்ணுது; எவனது கண்டம் இவ்விழையணி உடைத்தோ அவனே, நானக் இறையருள் பெற்றவன்." என்று பாடி புரிநூல் அணிய மறுத்ததாக வரலாறு. இந் நிகழ்ச்சிக்குப் பிறகு மாடுகளை மேய்ப்பதிலும் சாதுக்களுடன் பொழுது கழிப்பதிலும் தனிமை வாய்ந்த போதெல்லாம் தியானத்தில் மூழ்குவதிலும் வாய்பேசா மௌனியாகி சிந்தனையில் முழ்குவதிலும் ஈடுபட்டான். "ஸ்ரீ கண்ணபிரான் கால்நடைகள் மேய்த்திருக்கிருர்.

இயேசு நாதரும் கால்நடைகள் மேய்த்தார். நானக்கும் கால்நடைகள் மேய்த்தது குறித்து கால்நடைகளை மேய்ப்பதற் கும் தெய்வீக இயல்புக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருப்பது போல் தோன்றுகிறது. கடவுள் பித்திலே தோய்ந்து திரியும் நானக்கை, ஜெயராம், நானக்கின் தமக்கையின் கணவர் நாவப் தௌலத்கான் லோடியின் அரசவையில் நம்பிக்கை மிகுந்த ஒரு பதவியை வகித்து வந்ததினுல் நானக்கை நாவா

பிடம் அறிமுகப்படுத்தி நானக்குக்கு ஓர் வேலையும் வாங்கித் தந்து க்ஷத்திரியகுல சோனு உட்பிரிவைச் சேர்ந்த மூல்சந்த் குமாரத்தி ''சுலக்னியை'' விவாகம் செய்து வைத்தார். இவர்கள் மணவிழா நிகழ்ந்த இடத்தில் இப்பொழுது ஓர் ஆலயம் உள்ளது. ஆண்டுதோறும் ஆகஸ்டு மாதத்தில் அவரது மணநாள் ஒரு திருநாளாக கொண்டாடப்படுகிறது.

குருநானக்குக்கு சுல்தான் பூரிலேயே 1494 ஆம் ஆண்டு மூத்தமகன் ஸ்ரீ சந்ததும் 1496 ஆம் ஆண்டு இரண்டாவது மகன் இலக்குமி தாஸ் என்பவனும் பிறந்தனர்.

ஸ்ரீ சந்த் துறவறத்தில் நாட்டம் உடையவராய் உலகியல் பொருட்கள் மீது பற்றற்றவராக விளக்கினர். உதாசித்துறவிகள் அமைப்பை நிறுவியவர் என வரலாற்றில் அவர் இடம் பெற்றுள்ளார்.

இலக்குமிதாஸோ இல்லறத்தில் ஈடுபட்டு குடும்பத் தலைவர் ஆனார்.

நாளடைவில் குருநானக்கிற்குப் பல எதிரிகள் தோன்றி நவாப்பிடம் புகார் செய்தார்கள். நானக்கே நவாபிடம் தாம் வேலை பார்த்த பண்டகசாலையைச் சோதனையிடச் செய்து எல்லாம் சரியாக இருப்பதாக நவாப்பே பூரிப்பு அடைந்தாராம்.

ஒரு நாள் காலைக் கடன்களை முடிக்கச் சென்றவர் வீடு திரும்பவில்லை. பியன் நதிக் கரையில் அவரது ஆடைகள் மட்டும் காணப்பட்டதைக் கண்டு அவர் அந்நதியில் மூழ்கி யிருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நவாப் தௌலத்கானே நேரில் வந்து பிணத்தைக் கண்டு பிடிக்க ஏற்பாடு செய்தும் பல னில்லை. மூன்றும் நாள் நானக் மீண்டும் தோன்றினாராம். அந்த இடைவேளை மிக முக்கியமான ஓர் ஆன்ம அனுபவமாக அமைந்தது. இறைவனுடன் நேரடியாக மேற் கொள்ளப்பட்ட ஆன்மீக உறவு என ஜனம் சாக்கி அதனை வருணிக்கிறது. இந்தக் காரணத்தால் மேலான மெய்யறிவுத் தத்துவத்தை உணர்ந்த பின் குருநானக் அருளிய முதல் திருவாக்கு ஹிந்து என்பவனும் இல்லை முஸல்மான் என்பவனும் இல்லை. இதன் உட்பொருள் எந்த வொரு தார்மிக மதத்தைச் சார்ந்தவனாக இருந்தாலும் மனிதன் சமமானவன். அவனவன் தன் செயல் திறத்தால் தான் பரமாத்மாவின் அருகிலோ தொலைவிலோ இடம் பெறுகிறான்.

எந்த ஞான மொழியை எடுத்துரைப்பதற்குத் தாம் அழைக்கப்பட்டிருப்பதாக நானக் கருதினாரோ அந்த நன்

மொழியை போதிக்கும் பொருட்டு இப்பரந்த உலகில் பயணம் மேற் கொள்வதற்கு அவர் ஆயத்தமானர்: சுல்தான் பூரை விட்டுச் செல்ல வேண்டாம் என நவாபு தௌலத்கான் அவனது ஆட்சிப்பகுதி, உடைமை, அதிகாரத்தையும் நானக்கிடம் ஒப்புவிக்க முன் வந்ததாக புராதனஜனம் சாக்கு குறிப்பிடுகிறது.

அனைத்தையும் துறந்த குருநானக் புறப்பட்டதும் துணைவன் மர்தனவும் கூடப் புறப்பட்டு விட்டான்.

சுல்தான் பூரிலிருந்து தம் முதல் தர்மயாத்திரை தொடங்கி ஸைத்பூர் எனும் ஊரில் லாலோ எனும் கீழ் ஜாதிக் காரர் இல்லத்தில் தங்கினர். இதனல் பல பேர் இவரை ஏசினர் கள். குருநானக் மனிதர்களின் தராதரப் பாகுபாட்டை நாடு, இனம், நிறம், சாதி பேதங்களின் அடிப்படையில் வரையறுக்க வில்லை. இந்த முறையை முழுமையாக மறுக்கவும் செய்தார். அவர் இலட்சியக் கருத்துப்படி மனிதர் இருவகைப்படுவர்: குருமுகர் மனமுகர் குருமுகர் என்பவர் பகவானிடம் ஈடுபாடு கொண்டு வாய்மை தொண்டு எனும் குறிக்கோள்களுடன் வாழ்ந்து யாவருமே பரமாத்மாவின் புதல்வர் என்கிற நம்பிக் கையில் மனிதரிடையே சம நோக்குடன் பழகி வரும் பண்பாளர் கள்.

மனமுகர்கள் எப்போதும் சுயநல வேட்டையிலேயே ஈடு பட்டு உலகியல் சுக—சௌக்கியங்களுக்காகப் பொய் வஞ்சகம் தீங்கு புன்மையாவும் செய்யத் தயங்காதவர்கள் இத்தகைய வர்கள் எந்தவொரு மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்த போதிலும் அவர்களுக்கு இகத்திலும் சாந்தி கிட்டாது, பரத் திலும் நற்கதி கிடைக்காது.

ஸைத்பூர் விட்டுப் புறப்பட்டு பல இடங்களுக்குச் சென்று இமயமலைத் தொடரின் பக்கம் சென்று திரும்பி வந்து தம் பெற்றோர்களைத் தரிசித்து விட்டு இலங்கைப் பயணம் மேற் கொண்டு திரும்பி பஞ்சாபின் உட்பகுதியில் பிரவேசித்து வட திசைபூராவும் சுற்றிப் பிரயாணம் செய்து, மெக்காவிலிருந்து வடக்கு நோக்கிப் பயணம் செய்து நபிகள் நாயகத்தின் நகரமா கிய மதின அடைந்து டைகிரிஸ் நதிக்கரையிலுள்ள பாக்தாத்; ஈரான் சில மத்திய ஆசிய நாடுகள் ஆப்கானிஸ்தானம்; டெஹ் ரான் புஹாரா, சமர்கண்டு, பல்க், காபுல் ஜலாலாபாத் வழியாக கைபர் கணவாய் பாதையில் பெஷாவர் இராவல்பண்டி ஆகிய

இடங்களுக்குச் சென்று அவ்விடங்களிலெல்லாம் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு சாரரே என்னும் நெஞ்சை தொடும் பரிவுணர்ச்சியில் தோய்ந்த சொற்களில் மிகத் தெளிவாகப் பிரசாரங்கள் செய்தார். ஏசு கிறிஸ்து பல இன்னல்களுக்கு ஆளானது போல் குருநானக் பல இன்னல்களுக்கு இடையே தன்னுடைய கொள்கைகளை வலியுறுத்தி உபதேசம் செய்தார். நாம் கண்ட உண்மையைப் பரப்புவதற்காகத் தம்கொள்கை-கோட்பாடுகளிடம் திட நம்பிக்கை கொண்ட இருவரை சீடர்களாக்கிக் கொண்டார்.

ஒருவர் பால எனும் ஹிந்து; மற்றவர் முன் சொன்னபடி மர்தாஞ எனும் முஸல்மான். இருவரையும் ''பாஈ'' (சோதரர்) என்று அழைப்பார்.

பாரதத்தின் தார்மிகக்கிரந்தங்கள் பெரும்பாலும் ''ஓம்'' எனும் பிரணவத்துடன் தொடங்குகின்றன. இதை குருநானக் ஓங்கரிரத்திற்கு முதலில் ''1'' எண்ணைச் சேர்த்து புதிய விளக்கம் தந்தார் ''ஓங்காரம் ஒரே பரம் பொருளைக் குறிப்பிடுவது என்றார். இந்த ஓம் ('੧ੴ') பிரணவத்தின் உச்சாரணம் 'ஏக ஓங்கார' ஆகும். நிரங்கர் (பரம் பொருள்) ஒன்றுதான் என்பது இதனல் புலப்படுகிறது. இந்த ஒன்றே பூசிக்கத்தக்கது - வழிபட வேண்டியது என்பதும் புலப்பபடுகிறது. இந்தக் கோட்பாட்டிற்கேற்ப, குரு நானக் தம் சீடர்களைப் பல தெய்வங்களையும் வழிபடுவதினின்றும், வேறு அருவ சக்தியைத் தொழுவதினின்றும் தடுத்து விட்டார்.

அருவமான பிரணவத்தை சக்தியே சொரூபமாகக் கொண்டதோடு, அதையே ''கர்த்தா'' புருஷன் (படைத்துக் காப்பவன்) என்றும் விளக்கி இந்து மதச் சாத்திரங்களோடு, தம் முரண்பாட்டைத் தெளிவு படுத்திஞர். ஸ்ரீ சங்கரர் உயிர்–உலகம் ஜீவன் - ஸமஸ் ஸாரம் இரண்டிற்கும் மாயை தான் உதவுகிறது என்கிருர். மாயை சத்தியமல்ல, அசத்தியமுமல்ல, இரண்டும் கலந்தது; ஸத்யாஸத்யம். அகி விவரிக்க இயலாது. மாயையின் ப்ரபாவத்தால் பிரம்மம் ஜீவஞக மாறுகிறது. பிரம்மம் செயலற்றது. நடுநிலையிலுள்ளது.

உலகம் மாயையின் விளையாட்டுக் கூடம். ஆனல் குருநானக்கின் கொள்கைப்படி உயிரும் உலகமும் பரம்பொருள் என நிரகங்காரத்தின் ஆணையால் உருவாகின்றன, இயங்குகின்றன.

பரம்பொருளை அணுகச் சாதனமாக யோகிகளும், முனிவர்களும் யோக வழியைக் கொண்டார்கள். அதன் இறுதிநிலை

சமாதிநிலை. இதில் தேர்ச்சி பெற உபநிஷத் காலம் முதற் கொண்டே ஏகாந்தமான தனியிடத்தில் இருந்து சாதனை செய்து பயில் வேண்டுமென்று உபதேசிக்கப்பட்டு வந்திருக்கிறது. சுவாமி விவேகானந்தர் யோக சூத்திரங்களை ஆங்கிலத்தில் ''ராஜயோகம் என்ற பெயரில் மொழி பெயர்த்திருக்கிறார். அதன் ஒருபகுதியில் ''ச்வேதாச்வர'' உபநிஷத்திலிருந்து ஒரு பகுதியை எடுத்துக் காட்டி விவரித்திருக்கிறார் மனித மனதில் இரு அம்சங்கள் உள்ளன, தியானம், ஸ்மரணம். தியானம் ஏகாந்தமான இடத்தில் சஞ்சலமின்றி அமர்ந்து முயன்றால் சாத்தியமாகும். ஆனால் ஸ்மரணம் அப்படியல்ல ஏகாவதொரு செயலில் ஈடுபட்டவாறே சிந்தனையில் இணையலாம். செயலாற்றல் வீணாகாது. இதனால் தான் குருநானக் இறையருள் சாதனையில் ''ஸ்மரணம்'' சிந்தனை வழி பாட்டை மேற் கொள்ளுமாறு உ தேசித்தார். மனிதன் தன்னைப் படைத்த பரமாத்மாவை மறந்து விட்டான். இதனால் தான் துன்புறுகிறான். பரமாத்மா எங்கும் நிறைந்தவர் பரமாத்மாவிலிருந்து ஜீவாத்மா உற்பத்தி ஆகிறது.

ஜீவாத்மா பரமாத்மாவின் அம்சமே. பரமாத்மாவின் ஆணையின் படி வாழ்க்கை நடத்துகிற மனிதனிடத்தில் பரமாத்மாவின் அம்சம் குடி கொண்டிருக்கிறது. ஜீவாத்மா பரமாத்மாவின் ஜோதியில் இரண்டறக் கலந்து விடுகிறது ஜீவனின் ஜோதி பரமாத்ம சொரூபத்தைப் பெறுகிறது. ஆனால் வேதாந்திகள் கருதுகிறவாறு, ஜீவாத்மாவே பரமாத்மாவாக ஆகி விடுவதில்லை. ''ஜபுஜீ என்னும் அருள் வாக்குத் தொகுப்பில் குருநானக் உதாரணத்தோடு இக் கருத்தை நன்கு விளக்கியிருக்கிறார். எவ்வாறு நதிகளும், கால்வாய்களும் கடலில் கலந்து விட்டால், கடலின் பரந்த நிலையை முழுமையாக உணர முடியாதோ, அவ்வாறே பக்தர்களும் பரம் பொருளோடு இரண்டறக் கலந்த பின்னர், அதன் கரை காணா, ஆழங் காணா நிலையை அறிய முடியாது. இந்த உண்மையை சிந்தையில் தேக்கியவன் பாவச் செயலில் இறங்க மாட்டான். அவனது அந்தராத்மாவில் உள்ளொளி பிரகாசிக்கும்

யோக சாதனைக்கு எட்டு அங்கங்கள் கூறுவர். குருநானக் தேவரும் எட்டு அங்கங்களுடன் யோக சாதனைக்கு முதல் அங்கம் மகிழ்ச்சி, இரண்டாவது தொண்டு, மூன்றுவது குருவின் அருள் வாக்குகளை ஓதுதல். நான்காவது அவைகளை வாழ்க்கையில் கடைப் பிடித்தல், ஐந்தாவது ஸத்ஸங்கம், ஆருவது நாம சங்கீர்த்தனம் ஏழாவது ஜபம், எட்டாவது

ஸ்மரணம் சிந்திப்பது. இசையில் உள்ளம் நெகிழ்ந்து கலப்ப தால் நாம சங்கீர்த்தனத்தை ஓர் அங்கமாகச் சேர்த்தார்.

பிரயாணங்களைச் செய்து முடித்த பின்னர் குருகர்த்தார்ப் பூரிலே குடும்பத்துடன் நிலைத்து தங்கினர் அப்போது அவருக்கு வயது அறுபத்துஒன்று. பிரயாண காலத்தில் தாம் அணிந்திருந்த துறவற உடுப்பை களைந்து போட்டுவிட்டு இல்லறத்தாருக்கு உரிய உடுப்பை அணிந்துகொண்டார். பொதுவாக இல்லற வாழ்வில் உழன்று கொண்டிருப்பவர் ஒருகாலும் ஆன்மீக வளர்ச்சி பெறமுடியாது என்ற கருத்து இந்துக்களிடையே வேரூன்றி யிருந்தது. இந்த கருத்து, வருணாசிரம தர்மப்பகுப்பு முறையின் விளைவாக உருவாகி இருக்கலாம்.

வருணாசிரம தர்ம முறைப்படி; இளமையில் பிரும்மச் சாரியாக இருந்து இருபத்தைந்து வருடகால்ம் கல்விபயில வேண்டும், பிறகு இருபத்தைந்து ஆண்டு காலம் இல்லறத் தில் ஈடுபடவேண்டும் ஐம்பது வயதுக்குப் பிறகு இல்லறத் திலுள்ள ஈடுபாட்டைக் குறைத்துக் கொண்டு வனவாசம் வானப்பிரஸ்த நிலை மேற்கொண்டு தார்மிக-சாத்விக சிந்தை யுடன் தவநெறியைக் கடைப் பிடிக்கவேண்டும். பிறகு துற வறம் பூண்டு இல்லறப்பிணைப்புக்களிலிருந்து விடுதலை பெற வேண்டும். பிட்சை பெற்று உண்பதும் ஆத்ம சிந்தனை செய்வதுமே இந்த நிலைக்கான செயல்கள் ஆயின.

குருநானக் சுமேரு பர்வத்தில் சித்தர்களை சந்தித்து உரை யாடியபோது மெய் ஞானபோதம் கொண்ட சித்தர்களே மலைக் குகைகளில் சென்று வாசம் புரிகிறார்கள்; இனி பொதுமக்களுக்கு நல்வழி காட்ட யார்இருக்கிறார்கள்? என்ற நிலைமையை நன்கு ஆராய்ந்த பின்னர், நானக் துறவு வழியை மறுத்த தோடு அதை எதிர்த்தும் பிரசாரம் செய்யலானார். இல்லறத் தில் இருந்தவாறே உண்மையான, புனிதமான சிந்தனை, செயல்களைப் புரிந்து மனிதன் ஆன்மிக உயர்வைப் பெறலாம் என்றார் குருநானக். இதையே பகவத் கீதையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கர்மயோகத்துக்குத் துறவறத்தைக் காட்டிலும் மேலான பெருமை சேர்த்து உபதேசம் செய்துள்ளார். இந்து தர்மத்தில் தார்மிக-ஆன்மிக உயர்வுக்கான சிறந்த கருத்துக் கள் ரகசியமாகவே மறைத்து வைக்கப்பட்டிருந்தன.

சிஷ்யர்களைத் தவிர யாருக்கும் இந்த ரகசியத்தை வெளி படுத்தக்கூடாது என்று கூறிவந்தனர்.

குருநானக் பழைய கலாச்சாரத்தில் என்ன என்ன மாறுதல்களைச் செய்தார். அவை காரணமாக அவர் வழி வந்தவர்கள் சக்திமிக்க ஒரு சமுதாயமாக சீக்கிய சமுதாயமாக எப்படி உருவானார்கள் என்பதை ஓரளவு புரிந்து கொள்ளலாம் கர்த்தாப்பூருக்குச் சிறிது தொலைவில் காடுர் கிராமத்தில் உள்ள துர்க்கை கோவில் முதல் பூசாரி லேனு என்பவர் அதே கிராமத்தைச் சேர்ந்த ''ஜோதா'' என்ற சீக்கியர் ''ஜபுஜியை'' அதிகாலையில் ஓதிக் கொண்டிருந்தார். இந்த பாடலைக் கேட்டதும் லேனு இந்த பாடல் விவரம் அறிந்து குருநானக்கை சந்திக்கப் புறப்பட்டு கர்த்தாபூரில் குருவைச் சந்திந்து வணங்கி எழு ஆண்டுகள் குருவுக்குச் சேவை செய்து, பல சோதனைகளுக்குப் பின்னர் இவரை குருநானக்

இரண்டாவது குருவாக ஸ்தானத்தில் அமர்த்தினார். தலை தாழ்த்தி வணங்கி, ஐந்து தம்பிடிகளையும், ஒரு தேங்காயையும் வைத்து, குருவாக மதித்து மரியாதை செய்தார். பக்கத்தில் இருந்தவர்களையும் லேனு என்னும் அங்கதைக் குருவாக அங்கீ கரிக்கும் படியும், மரியாதை செய்யும் படியும் சொன்னார். எல்லோரும் கீழ்படிந்து, சீக்கியரகள் அனைவரும் தங்கள் இரண் டாவது குரு அங்கத்துக்கு மரியாதை செய்தார்கள்.

தாம் இவ்வுலகத்துக்கு வந்த பணி, பலமான அடிதளத்-தின் மீது அமைக்கப் பட்டு விட்டது என்றும், அதைத் தொடர்ந்து நடத்தத்தக்க ஒருவரை தமது ஸ்தானத்தில் அமர்த் தியாய் விட்டது என்றும், ஆகவே தாம் செய்ய வேண்டிய பணி தொடர்ந்து நடைபெற வாய்ப்பு ஏற்பட்டு விட்டது என்றும் குருநானக் திடமாக நம்பினார்.

இனி இந்த உலகில் தாமதியாது இறைவனுடன் இரண்-டறக் கலப்பதே நலம் என்னும் முடிவுக்கு வந்தார். குருநானக்-கின் சீரிய- புதிய அறநெறி வழியின் பயனாக அவரை ஹிந்து முஸ்ல்மான் இரு சாராருமே நேசித்தார்கள்.

அந்தியத்தில் மக்களை எப்படிக் கடைத்தேற்றுவது என்று குருநானக் வசனமுற்று :—

''கலி காதீ ராஜே காஸாஈ தரமு பங்ககரி உபிரி ஆ,
கூடு அமாவஸ் ஸசு சந்த்ரமா தீஸை நாஹீ-
கஹ்சபி. ஆ

ஹஉபாலி விருந்நீ ஹோஈ ஆதேரைராஹீ நகோஈ
விசி ஹ உமை கரி துக்குரோஈ; கஹீ நானக் கினி-
விதிகதி ஹோஈ

(பொருள்)

கலியுகம் ஒரு சூரிக்கத்தி. ஆட்சியாளர் கொடியக சாப்-புக்காரர்கள். தர்மம், நெறியெலாம் பறந்து போயின. பொய்-யாகிற அமாவாசை இருண்டு கவிந்திருக்கிறது.

சத்திய முழுமதி மறைந்திருக்கிறது. அது எங்கு சென்-றதோ? இருளில் வழி புலப்படவில்லை நான் தேடிச் தேடிச் சளைத்துச் சலித்து விட்டேன். மக்கள் சுயநலப் பணிகளே புரிந்து துன்புறுகிறார்கள். இந்த மக்களை எப்படிக் கடைத் தேற்றுவது?

## தமிழ்மொழி

"இறைவன் என்பான் ஒருவனே உளன்; உளதாய் இருப்பவை யாவும் அவனே; அனைத்துள பொருளையும் படைப்-பவன் அவனே; அனைத்துப் பொருளிலும் நிறைந்தவன் அவனே, அச்சமிலான் அவன்; பகை எதும் இல்லான் அவன் அகாலி; பிறப்பிலன்; தனில் தானுளன்; அவனே ஞான ஒளி-யினை அளிப்பவன்; அவனருளே கொண்டு அடைத்திடத் தக்க வன்; ஆதியிலே அவன் இருந்தான்; கழிந்த பலப்பல ஊழியிலு மவன் இருந்தான் சத்தியமாம் அவன் உளன்; ஏநானக் என்-றென்றும் அவன் உளனுயிடுவான்

அங்கதர் குரு ஸ்தானத்தில் அமர்ந்து மூன்று மாதங்கள் கடந்ததும் குரு விரைவில் விண்ணுலகு சென்று விடுவார் என்-பதைச் சீடர்கள் உணர்ந்தார்கள். குரு ஒரு புதிய சம்பிரதா-யத்தை நடைமுறைப் படுத்தி இருப்பதால், அவருடைய சடலத்தை எந்த சம்பிராதயப்படி அடக்கம் செய்வது என்று கேட்டார்கள். அதாவது இஸ்லாமிய சம்பிரதாயப்படி புதைப் பதா அல்லது ஹிந்துக்கள் செய்வது போல சுடலையில் எரிப்பதா என்ற கேள்விக்கு குருதேவர் எரிக்க விரும்புவர்கள் ஒரு பக்கத்-திலும், புதைக்க விரும்புவர்கள் ஒரு பக்கத்திலும், மலர்களை வைத்து விடுங்கள் யார் மலர் வாடுகிறதோ அவர்கள் விட்டுக் கொடுத்து விடுங்கள் என்று சொன்னார். 1539ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 22ம் ௳ எழுபதாவது வயதில் சிஷ்யர்களையும் திருச் சபையினரையும் இறைவன் புகழை இசைக்குமாறு

பணித்தார். சோகிலா படிக்கப்பட்டது. அதன் பின் ஜப்ஜீயின் முடிவுரை உரைக்கப் பெற்றது. குரு படுக்கையில் படுத்திருந்தார் ஹிந்துக்கள் ஒரு பக்கத்திலும், முஸ்லிம்கள் ஒரு பக்கத்திலும் மலர்களை வைத்தார்கள். பிறகு குருநானக் தேவர் தமது உடலைப் போர்வையால் போர்த்துக் கொண்டார். மறுதினம் இரு தரப்பினரும் வந்து போர்வையை நீக்கிப் பார்த்தார்கள். உடலை அங்கே காணோம். இருபாலரின் பூக்களும் அன்று மலர்ந்த நிலையில் இருந்தன. அவர் அவர்கள் மலர்களை எடுத்துக் கொண்டு முழந்தாளிட்டு அஞ்சலி செலுத்தினர்.

சீக்கிய சமயத்தில் குரு பிரதான அங்கம் ஆவார். அவருடைய வாக்கைக் கடவுள் வாக்கே போல் மதித்து கட்டுப் பட்டு நடப்பது அவசியத்திலும் அவசியம் ஆகும் என்று சீக்கிய சமயம் வற்புறுத்திக் கூறுகிறது.

குருவின் போதனைகள் 82

சடங்கு சம்பிரதாயம் 16

சீக்கிய சமயத்தில் பத்து முக்கிய குருமார்கள் முதல்வர் பெயர் நானக் தேவர். இப் பத்துப் பேரின் ஆட்சிக் காலம் சுமார் 239 ஆண்டுகள். மொகலாயர் ஆட்சி பாபர் சக்ரவர்த்தியுடன் குருநானக் தொடங்கி, அவுரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில் சீக்கியர்களின் கடைசிக் குரு கோவிந்த சிங். கொடிய ஆட்சியாளர்களை எதிர்த்து சீக்கிய சமயத்தை ஓர் உன்னத நிலைக்கு நிறுத்தியவர் குரு கோவிந்த்சிங்.

1. குருநானக் தேவர் 2. குரு அங்கதர்; 3. குரு அமர்தாஸ்; 4. குரு ராமதாஸ்; 5. குரு அர்ஜுனர்; 6. குருஹர் கோவிந்து 7. குருஹர் ராய்; 8. குருஹர் கிருஷ்ணு; 9 குரு தேஜ்பகதூர்; 10. குரு கோவிந்தசிங்.

குரு கோவிந்த்சிங் பின் பதினோராவது குருவாக "குரு கிரந்த சாகிப் என்னும் நூல் தங்களுக்கு வழி காட்டுகிறது என்பது சீக்கியர்கள் நம்பிக்கை, இது சீக்கியர்களின் திருமறை ஆகும். சீக்கிய குருமார்கள் பதின்மரும்; கபிர்தாஸ்; ஜெயதேவர்; நாமதேவ்; ராமனந்த; ரவிதாஸ்; சூர்தாஸ் ஆகியோர் பாடல்களும்; பாரீத்; பிக்கான் என்னும் முஸ்லிம் சான்றோர் பாடல்களும் அதில் இடம் பெற்றுள்ளன.

## "அர்தாஸ்" (பிரார்த்தனே)

"நானக் நாம சடதீ கலா
தேரே பாணே ஸரபத்த தாபலா"
(இ பொருன்)

"ஐயனே! எங்களுக்கு எப்போதும் நம்பிக்கையுடன் வாழ ஆசி கூறி அருள்க! உன் அருளார்வத்தின் பிரபாவத்தால் அகில உலகிற்கும் நலன்கள் ஏற்படட்டும்.

## பாரசீக மதம்

இம் மதத்தை "ஜரசுஸ்தா" என்பவர் ஸ்தாபித்தார். இவர் கிறிஸ்து பிறக்கப் பல வருஷங்களுக்கு முன் இருந்தவர். இவர் பால்யத்தில் வேத வேதாங்கங்களைக் கற்று மத ஸ்தாபனம் செய்யத் தொடங்கினர். இவர்களுடைய தேவனுக்கு ஜரான ஹாகுரான் என்பது பெயர். இவர் இந்த உலகத்தைச் சிருட்டித்து, அஹரீமா (இருட்டு) என்னுப் உபதேவனைச் சிருட்டித்து, அவனை அஞ்ஞானதிற்குத் தேவனுக்கி, அஹரீமா செய்யும் கெட்ட காரியங்களைப் போக்க ஆரமசெட் என்னும் சூரியனைச் சிருட்டித்தார். இவ்விருவருக்கும் 3000 வருடம் போர் ஏற்பட அதில் ஆரமசெட் வெற்றி பெற்றுனகை-யால் ஜனங்கள் அஞ்ஞானம் நீங்க ஆரமசெட்டைத் துதிக்க வேண்டும், இறந்தோர் மூன்று தினத்தில் கடவுளை அடைவர். இறந்த சரீரத்தைக் காக்கையும் கழுகும் உண்ண விடல் புண்ணியம். இவர்கள் நீதி விஷயங்களெல்லாம் இந்துக்களை அனுசரித்து இருக்கின்றன. இவர்கள் பெரும்பாலும் அக்னியைப் பூசிப்பர். கடவுள் முதலில் ஆகாசத்தையும் பூமி பர்வதங்கள் சூரிய சந்திராதி நட்சத்திரங்களையும் சிருட்டித்தாரென்றும் பிறகு கெயோமாத் என்னும் ஆதி மனுஷன் உற்பத்தியாகையில் அவனைக் கொல்ல அவ்விடத்திலிந்து ஓர் இடபம் பிறந்ததென்றும், அதன் வயற்றினின்று 10 புருடர்களும் பெண்களும் பிறந்தார்களென்றும், அவர்களில் மெஜிக்கியா,

மெஜிக்கின என்னும் முதல் தாய் தந்தையர்கள் பிறந்து ஆட்டின் பால் குடித்து அவர்களும் அவர்களுக்குப் பிறந்த சயமாக், விசிகாக் என்பவரும் பாவிகளானார்கள் என்றும் ஆதலால் உலகத்தவர்களெல்லாம் பாவிகளா னார்கள் என்றும் கூறுவர்.

## யூதமதம்

கி. மு. 3000 ஆண்டளவில் மெசப்பொட்டேமியா என்ற நிலப்பகுதியில் நாடோடிகளாக வாழ்ந்த மக்கள் இனத்தாராகிய எபுரேயர்களின் (Hebrews)சந்ததியாரே யூதர் எனப்படுவோர்.

ஆபிரகாம் என்பவரும் அவர் மகன் ஈசாக்கும் (Isac), பேரன் யாக்கோபும் (JACOB) யூத குலத் தோற றத்திற்கு ஆதிகாரணர். கல்தேயா நாட்டிலுள்ள அர் (UR) என்னும் சொந்த இடத்தை விட்டு வெளியேறக் கடவுளிடமிருந்து அழைப்பு வரவே, ஆபிரகாம் தம் பிள்ளைகளுடன் ஆடு மாடுகளுடனும் பாலைவனத்திலே நாடோடியாகச் சுற்றித்திரிந்தார். இக் காலத்தில் கடவுள் மானிட வடிவம் தாங்கி மனிதர்களுடன் தோழனைப் போல இருந்து வந்தார் என்பது இந்த மதத்தின் பாவனை. கேனன் தேசம் முழுவதையும் (இக் காலத்தில் பாலஸ்தீனம்) ஆபிரகாமுக்கும் அவர் சந்ததிக்கும் உரிமையாகக் கொடுத்து, அவர்களுக்குத் தேவனாயிருப்பதாகக் கடவுள் அபிரகாமுக்கு வாக்குக் கொடுத்தார்.

யூதசமயத்தின் அடுத்த கட்டத்தில் முக்கிய மானவர் மோசே என்பவர். இக்காலத்தில் எகிப்து எகிப்து நாட்டின் அரசனான பாரோவுக்கு யுதர்கள் அடிமைகளாகி மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருந் தனர். கடவுள் மோசேயுக்கு தரிசனமாகி, எகிப்தில் துன்பம்படும் யூத மக்களை விடுவிக்கும்படி கட்டளையிட் டார். அதன்படி மோசேயும் அவர் சகோதரனும்

ஏகோவா (கடவுளின் பெயர்) வின் வல்லமையால் யூதர்களை விடுவித்தனர். ஏகோவா மோசே மூலமாய் பத்துக் கட்டளைகளை யூதர்களுக்குக் கொடுத்தார். பத்துக் கட்டளைகளடங்கிய நியாயப் பிரமாணமும், ஆலய நியமனங்களும் கடவுள் தாமே தம் மக்களை ஆட்சி புரிவதும் மோசே தத்துவத்தின் முக்கியக் கொள்கைகளாகும்.

சால் (Saul) என்பவர் தாம் முதன் முதலாக இஸ்ரேல் ராச்சியம் முழுவதையும் ஆண்டவர். அவருக்குப் பின்னர் தாவீது (David) ஆண்டார் அவருடைய குமாரர் சாலமன் காலத்தில் இஸ்ரேல் மக்கள் தலை சிறந்து விளங்கினர். சாலமன் இறந்த பின் யூத மக்கள் பிளவுற்றனர். உள்நாட்டுச் சண்டை ஏற்பட்டு, தேசம் வடபாகம், தென்பாகம் என இரண்டு பிரிவாகி எதிரிகளான அரிசியர்களுக்கும் பாபிலோனியர்களுக்கும் இரையாகியது.

எருசலேம் நகரமும் அங்கிருந்த கோயிலும் அழிக்கப் பெற்றது.

எத்தனை துன்பங்கள் அடைந்தாலும் யூதமக்கள் சோர்வு கொள்ளாமல் மனத்தில் உறுதியோடு இருப்பதற்குக் காரணம் அவர்களுடைய யூத மதமேயாகும். ஒரு நாள் மெசையா (உலகத்தை உய்விப்பவர்) தோன்றுவார் என்று மத குருமார்கள் போதித்தனர். அது யூதர்களுக்குத் துன்பங்களைப் பொறுப்பதற்குரிய வீரத்தைக் கொடுத்தது.

கிறிஸ்த்தவ மதத்தின் அடிப்படைக் கொள்கைகள் யூத மதத்திலிருந்து வந்தவைகளே

## கிறிஸ்துவ மதம்

இம் மதத்தவர்கள் கடவுளால் ஆதியில் வானமும், பூமியும் படைக்கப்பட்ட தென்றும், பின்பு வெளிச்சம், இருட்டு, ஜலம், சூரிய, சந்திரர்களையும், தாவர சங்கமப்

பொருள்களேயும், கடைசியில் தம் சாயலாக ஆதாம் ஏவாள் என்கிற ஆதி புருடனேயும் ஸ்தீரீயையும் முறையே படைத்து தம் கிரியையெல்லாம் முடித்து ஏழாம் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை தினத்தை ஓய்வு நாளாக்கி அதைப் பரிசுத்தப்படுத்தி, தம்மை வணங்க வேண்டுமென்று கட்டளேயிட்டதாகவும் கூறுகிருர்கள்.

## தேவ செயல்

கடவுள் தாம் உண்டாக்கின உலகினுள்ளார்ந்து தம் கரங்களின் கிரியைகளேக் காப்பாற்றி விருத்தியடைச் செய்து வருகிருர். அவர் இவ்வாறு செய்யவே படைப்பில் தாம் ஏற்படுத்திய இயல் விதிகளேயும், ஒழுங்குகளேயும் அனுசரித்து அவற்றைத் துணேக் காரணங்களாகக் கையாளுகிருர். இந்த தேவ செயலுக்குப் பராமரிப்பு என்று பெயர் வழங்கப்படும்.

தெய்வீக அன்பு ஓயாமல் வழிந்தோடி எப்பொழுதும் படைப்புத் தொழிலே ஆற்றிக் கொண்டே வருகிறது என்ற தப்பான உட்பதேசத்திற்குத் தேவ செயல் என்ற இந்தச் சித்தாந்தம் ஒவ்வாது. கடவுள் ஒரு முறை படைத்தார். பிறகு தாம் படைத்தவைகளே ஓயாமல் பரிபாலித்து, பராமரித்து வருகிருர். படைப்பு என்பது வேறு; பராமரிப்பு என்பது வேறு (9ம் ஆம் அதி 4அம் உட்பிரிவு பார்க்க). மணிப் பொறியாளர் கடிகாரத்தை உண்டாக்கி அதற்குச் சாவி கொடுத்துப் பின்பு ஒன்றும் செய்யாமல் அதைத் தாளுய் ஓட விடுவார்; அவ்வாறே கடவுள் சகல கிரகங்கள், நட்சத்திரங்கள், ஒவ்வொன்றையும் உண்டாக்கித் தம்தம் ஓட்டத்தில் ஓடச் செய்து விலகியிருந்து ஓய்ந்திருக்கிருர் என்பது இன்னெரு அபிப்பிராயம். கடவுள் தாம் செய்து வந்த வேலேயை ஏழாம் நாளில் பூர்த்தி செய்து, ஏழாம் நாளில் ஓய்ந்திருந்தார் என்று வேதாகமம் கூறினது உண்மை; எனினும் கடவுளின் ஓய்வு கிரியை அற்ற ஓய்வு அன்று (சங் 104 :

30 யோவான் 5 : 17). பாதுகாப்பு என்னும் செயலை ஒரு விநாடியும் செய்யாமல் ஓய்ந்திருப்பாரானால்; உலகின் கண் சர்வ நாசமே விளையும். தேவனுடைய ஓயாத செயலின்றி ஒன்று வாழ முடியாது; ஒன்றும் நடக்காது; ''நாம் அவருக்குள் பிழைக்கிறோம்; அசைகிறோம்; இருக்கிறோம் (அப் : 17 : 28; சங் 36 : 6; நெகே 9 : 6).

தாம் உண்டாக்கின உலகில் தீய செயல் நுழைய விட்டார் தேவன். தாம் படைக்கும் மக்கள் யாவரும் கலகஞ் செய்யும் பாவிகள் ஆவது நிச்சயமாயினும் அவர்களைப் படைக்கவும், பராமரிக்கவும் திட்டம் வகுத்தார். எனினும் கடவுள் தாமே தீமைக்குக் காரணர் அல்லர் (சங் 81: 12: அப் 14: 16 ரோமர்: 24, 28). தீயோர் தாங்கள் ஆற்றும் தீமைக்குத் தாங்களே பொறுப்பாளிகள்

''வீரமாமுனிவர் தமிழுலகம் போற்றும் தமது தேம்பாவணியின் பாயிரத்தில் இச் செய்யுளை எத்துணை இனிமையாக அமைத்திருக்கிறார்.

(வீரமா முனிவர்) கடவுளின் மலரடி தொழுதல்) மருமலி மலர் நிழலே மறை மலி உயர்பயனே திருமலி கர முகிலே சிவமலி தனி முதலே இருமலி உவகுளரே இனரோடு தொழு மடியே இருமலி அறநெறியே கொழு மலரடி தொழுதேன்.

(பொருள் :-)

வாசமலர்ச் சோலையை ஒத்த அருளால் நிழல் செய்து அளித்தவனே, வேதம் நமக்குப் பயன் தரும்படி வந்தவனே, செல்வத்தையும் நன்மைகளையுய் பொழியும் மேகத்தை ஒத்தகையை உடைவனே, மோட்சத்தை அருளும் ஒப்பற்ற முதல்வனே, வானுலகதோரும், பூவுலகத்தாரும் மலர் சாத்தி வணங்கும் திருப்பாதத்தை உடையவனே ஈங்கு அவதரித்து குருவாக வந்து நல்லறத்தின் வழியாக நின்றவனே, உனது

வளம் மிக்க மலர் போலும் பாதத்தைத் தொழுவேன். உலகத்தாருக்கு உண்டாகிய பாவத்தை துடைத்து அவர்களை ரக்ஷிக்கும் பொருட்டு பெத்தலேக தேசத்தில் தச்சு வேலை செய்து ஏழை ஜீவனம் செய்து வந்த ''யூசோப்புக்கு'' நியமிக்கப் பட்டிருந்த மரியா கன்னியின் வயிற்றில் தீர்க்கதரிசிகள் வாக்கின் படி, ஏசு ஜனித்தார். இவர்க்கு 'இம்மானுவேல்' 'ஆதாம்' 'மெசய்யா' என்கிற நாமங்களுண்டு; கிறிஸ்துவின் பிறப்பின் வரலாற்றை லூக்கா; 1, 2; மத்தேயு 1:2 அதிகாரங்களில் வாசிக்கிறோம். இவர் பிறந்த எட்டாம் நாள் சுன்னத்தையடைந்து ''இயேசு வென்று'' (இரட்சிப்பவர் அபிடேகம் பண்ணப்பட்டவரென்று பொருள்) நாமம் சூட்டப்பட்டு நாற்பதாம் நாள் தேவாலயப் பிரதிட்டையாக்கப்பட்டதாய் மோசேயின் ஆதியாகமத்தினல் தெரிய வருகிறது. உலகத்தில் ஆங்காங்கு தோன்றிய அவதார புருஷர்களைப் போல் இவரும் அநேக அற்புதங்களைச் செய்ததாக வரலாறு உள்ளது. பன்னிரண்டாவது வயதிலேயே தேவாலய போதகர்களோடு மதவிஷயமாய் தர்க்கங்களைச் செய்து வந்தார்.

முப்பதாவது வயதில் உலகப் பிரசித்தமாகி உலகத்தின் அநித்திய வாழ்க்கையைப் பற்றியும் மத சம்பந்தமான போதனைகளையும் பிரசங்கஞ் செய்து வந்தார். இவர் தாம் பிறருக்குப் போதித்தபடி பரிபூரணமாய் பரம பிதாவிடத்தில் பக்தியாய்யிருந்ததால் இவரிடம், பேதுரு; அந்திரேயா; யாக்கோப்; யோவான்; பிலிப்பு; பர்த்தலேமியு; தோமா; மத்தேயு; யாக்கோபு; தடேயு; சீமோன்; பகுதா ஆகிய, பன்னிரண்டு சிஷியர்கள் இவரைப் பின்பற்றியிருந்தார்கள்.

இவருடைய கொள்கையானது கடவுளை பூரண இதயத்தோடு, பக்தியோடு விசுவாசித்து, அயலாரையும் நம்மைப் போல் நேசிக்க வேண்டும், பரோபகார சிந்தனையுடையவர்களாக இருக்க வேண்டும். அக்காலத்

திலிருந்த யூதர்களில் புக்தியீனர்கள் சிலரால் பலவித கஷ்டங்களுக்கு ஆளாகி ''யூதாஸகாரியோத என்ற சிஷ்யனுல் காட்டிக் கொடுக்கப்பட்டு சிலுவையிலறைப் பட்டதாக வரலாறு.'' இத்தகைய துன்பத்திற்கு உட் பட்டும் தனது உயிர் பிரியும் காலத்திலும் ஜீவ காருண் யம் உள்ள சிந்தனையில் தன்னைச் சிலுவையில் வைத்த வர்களுக்காக தேவனிடம் முறையிட்டாராம். ''தாங்க ளின்னது செய்கிறோமென்பதறியாத இவர்களை மன்னி யுங்கள் தேவரே'' என்று முறையிட்டாராம். இறந்த மூன்றும் நாள் உயிர்த்தெழுந்து தமது சிஷ்யர்களுக்கு புத்திமதிகளைப் போதித்து உலகமெங்குஞ் ''சுவிசேடத் தை'; (சுவிசேஷம் என்பது பைபில்) கிறிஸ்துவ வேதத் தை உபதேசஞ் செய்து பரவச் செய்யுமாறு வேண்டி பரலோகஞ் சென்றுர்.

இயேசு முப்பத்து மூன்று வயது வரை பிரம்மசாரி யாகவே கால கழித்தார். மகமத்தியரைப் போல் சுன்னத்து செய்கிற வழக்கம் பிரபலமா இருந்ததை கிறிஸ்து மறுத்து ஞான ஸ்நானத்தை பிரசித்தப் படுத்தினர்

''ஞான ஸ்நானமாவது நீரால் பரமபான ஸ்நான மும், பரிசுத்த ஆவியினுல் உண்டான ஸ்நானமும் செய் வதாம். இயேசுநாதர் பரமண்டலப் பிராப்தியடைந்த பின்பும் அவர் மதத்தை அனுசரிப்பவர்களால் இவ்வழக்க மின்றும் கொண்டாடப்பட்டு வருகிறது. இயேசுநாதர் பர மண்டலத்தையடையும் போது தன்னுடைய மாமிசத்தை அப்பமாகவுப் இரத்தத்தை இரசமாகவும் கொள்ளக் கட வீர்களென்று தத்து வார்த்தமாய் உபதேசத்ததை அனு சரித்தே தேவாலயங்களுக்கு அப்பத்தையும் இரசத்தை யும் காணிக்கையாகக் கொடுத்து குருமார்களால் ஜபம் செய்யப்பட்டு பிறகு பரிசுத்த பக்திமான்களுக்கும் வியாதி ஸ்தர்களுக்கும் கொடுப்பார்கள். கிறிஸ்துவின் வாழ்க்கை வரலாறு அவருடைய தெய்வீகத்திற்கு அத்தாட்சி யாகும் :-

அவர் தம்மையே மேசியா என்று கூறினுர். (யோவான் 4:26) பேதுரு, பர்னபா; பவுல், அப்போஸ்தலர்கள் மக்களது வணக்கத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. 'எழுந்திரும், நானும் ஒரு மனிதன் தான் என்றுசொல்லி அவனைத் தூக்கி எடுத்தான் (அப் 10:26). தேவதூதர் முதலாய் தங்கள் கால்களில் விழுந்தவர்களை அதட்டி 'வேண்டாம், வேண்டாம். நானும் ஓர் ஊழியக்காரன், கடவுளையே வணங்கு' என்ருர்கள் வெளி 19: 10: 22:28: இயேசுவோ (மத்தேயு 28: 17) மாற்கு 1: 40: யோவான் 9:38) தமது காலில் விழுந்து பணிந்து கொண்டவர்களை தடை செய்யாது அவர்களுடைய வணக்கத்தை ஏற்றுக் கொண்டார்.

இயேசு கிறிஸ்து தமது உபதேசத்திற்குத் தம்மையே மூலமும் அடக்கமுமாகக் கொண்டு போதித்தார். வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிற மக்களைத் தேவனிடத்திற்கும் போகும்படி சொல்லாமல் தம்மிடத்தில் வர வழைத்தார் [மத் 11:28: யோவான் 5:40:7:37] இயேசு கிறிஸ்து ஆநாதிகாலமாக பிதாவோடு ஒன்றித்திருந்த ஜீவவார்த்தை என்கிருேம். கடவுள் பேசினுர்? சர்வ சிருஷ்டி உண்டாயிற்று [ஆதியாகமம் 1:1–3] கடவுள் சொன்ருர் கடவுளின் வார்த்தை முழங்கிற்று. வல்லமையோடு அதைச் செய்தது.

யோவான் இங்கு ஒரு கிரேக்க தத்துவ ஞானபதமாகிய லாகாஸ் என்பதை உபயோகிக்கிருர். இதற்கு கடவுள் சிந்தையில் விளங்கும் பகுத்தறிவு அல்லது பிரபஞ்சத்தில் அமைந்துள்ள தெய்வ சக்தி என்று கிரேக்க தத்துவ ஞானிகள் செய்த அர்த்தமாகும். பில்லோ என்ற யூதமத சாஸ்திரியும் இப்பதத்தை உபயோகிக்கிருர். யோவானே இப்பதத்தை ஒரு தத்துவ ஞானப் பொருளாக மாத்திரமல்ல, கடவுளை மனிதருக்குப் பிரத்தியட்சமாகக் காட்டிய இயேசு கிறிஸ்து என்ற ஓர் தெய்வப் புருஷனைக் குறிப்பிடுகிருர். இது சம்பந்தமாக நமது

இந்து முற்பிதாக்கள் வழங்கிய "ஓம்" என்ற பதத்தையும் நாம் கவனிப்பது நல்லது. கழிந்ததும், நிகழ்வதும்; வருவதுமாகிய எக்காலமும் நிலேதவருத சத்தியம் இந்த ஓம் என்பதில் அடங்கியிருக்கிறது. சர்வத்துக்கும் ஆதியாகிய அநாதி பரம்பொருளை இது குறிப்பிடுவதால் கடவுளை "ஓம்" என்று அழைப்பது பொருத்தமே.

"பொன்னுல குச்சிதப் புகழ்ச்சி யோம் நமா
பூரண காரணப் புதுமை யோம் நமா
தன்னிக ரொன்றிலாத் தாதை யோம் நமா
தற்பர மெய்ப்பர சயம்ப தோம் நமா
இந்நிலம் புரக்குமு ரட்சிப் போம் நமா
இசரவே லதிபதி யேசுவோம் நமா
நன்னிலிருக்கிரும் ஓகோம் நமோ நமோ
நாயகு ஓசனு நமஸ்தனுதியே.
[வேதநாயக சாஸ்திரியார்]

ஓம்; ஆம்; அமென் என்பது இருக்கிற பிரகாரமாய் இருக்கிறேன் என்னும் நித்திய வஸ்துவைக் குறிப் படும். ஓம் சாந்தி, சாந்தி சாந்தி பாந்தி என்ருது நமது வணக்கத்துக்குரிய பதங்களே, வேத நாயக சாஸ்திரியார் சாமுவேல் ஐயர், வித்வான் கிருஷ்ணபிள்ளை போன்ற நமது கிறிஸ்துவக் கவிராயர்களும் இப்படியே கருதிக் கவி பாடியுள்ளார்கள். விபரம் யோவான் சுவிசேஷ வியாக்கியானம் 2ம் பக்கம் பார்க்கவும்)

## உரோமர் மதம்

கிரேக்க தேசத்தைச் சேர்ந்த இத்தாலியில் உரோமபுரியில் வசிப்பவர்கள் ஆரிய வகுப்பினராகக் கருதப்படுகிருர்கள். இவர்கள் தேசத்தின் உரோமபுரியினரே உரோம மதத்தவ-ரெனக் கூறப்படுகின்றனர். இவர் வணங்கும் தெய்வம் ஜானஸ் என்னும் தெய்வம் சிருஷ்டி கர்தா வென்றும், அவராலே உகமும் வருவுமும் உண்டான தென்றும் ஜூன் என்னும் கன்னிகா தேவதையால் மாங்கல்லிய கருமங்கள் காக்கப் படுவதென்றும்;

மை நீர் வா என்னும் அறிவு பொறுமை விளைவிக்கும் கடவு-ளென்றும் மூவகையாப் கூறுகின்றனர். இது தவிர மற்றும் சில்லரைத் தெய்வங்களையும், சூர்யனையும், சந்திரனையும், ஊற்-றையும், பாம்பையும், பஞ்ச பூதியங்களையும் வணங்கிகின்றனர். வருஷம் பூராவும் பலவிதத் திருவிழா உற்சவங்கள் செய்து கொண்டாடுவதில் மிகவும் உற்சாகம் காட்டுகிருர்கள். முக்கிய மாக அநேக வாலிப ஸ்திரிகளைக் கன்னிகா மடங்களிற் சேர்த்து, ஆயுள் பரியந்தம் தேவர்களை வணங்கவும் தொண்டு செய்யவும் ஈடுபடுத்துகிருர்கள். இவர்கள் யாராவது விபசரித்தால் அவர் களை உயிரோடு புதைத்து விடுவார்கள். உரோம தேசத்திலுள்ள தத்துவ ஞானிகள் மாத்திரம் மேற்படி வழியில் ஈடுபடாமல் ஜெனிகா என்னும் ஒரே கடவுள் என்று ஸ்தாபித்து வாதிப்பார் கள். உரோமன் சபை என்று உலகம் பூராவும் சபைகளை ஏற்-படுத்தியுள்ளார்கள்.

## கிரேக்க மதம்

இது ஐரோப்பா கண்டத்தின் தென் பாகத்தில் கிரீஸ் என்ற நகரத்திற்குண்டான பெயர் கிரேக் மதம் என கூற நேர்ந் தது. இவர்கள் பாஷை ஆங்கில அக்ஷர ரூபமாக 11633 பதங் களையுடைய ஓர் பாஷை. இதில் இரண்டாயிரம் பதங்கள் சமஸ்-கிருதமாக இருத்தலினல் இவர்கள் ஆரிய வகுப்புப் பகுதியினர் என்று உத்தேசிக்கப் படுகிறது. இவர்களுக்கு சமயா சாரியரும், மத சித்தாந்த சாஸ்திரங்களும் இல்லை. இதனுல் இவர்களுள் கவி வாணர்கள் ஓர் கருத்திலும்; தத்வ ஞானிகள்; சாதரண குடிகள் வெவ்வேறு கருத்திலும் தெய்வங்களைக் கொண்டாடு கின்றனர்,

### கவி வாணர்கள் கருத்து

தேவன், சமுத்திர தேவன், சூரியன், சந்திரன் முதலிய வர்களை விக்கிரக ரூபமாக வைத்துத் துதிப்பார்கள். மேலும், அழகு, அறிவு, சத்தியம் பொருந்திய மனிதர்களை எல்லாம் தேவர்களென்றும் பூமியிலேயே ஜனித்தவர்கள் இகபரபோகமே உண்மையான சுகம் என்று கருதுபவர்.

### தத்துவ ஞானிகள் கருத்து

இம் மதத்துள்ள தத்வ ஞானிகள் தெய்வம் ஒருவரே. அக் கினியே கடவுளென்றும் பரிசுத்த எண்ணமே கடவுள் என்றும்

கருத்துள்ளவர்கள். ஹிந்துக்களைப் போலவே ஸ்நானம் செய்து சுத்தியோடு ஆலயத்துக்கு சென்று ஆராதனை முதலியன செய்து வருகின்றனர்.

### சாதரனை குடிகள் கருத்து

இவர்கள் ஹிந்துக்களைப் போல் பூதேவி; அன்புக்கடவுள்; மோட்ச கடவுள், இவர்கள் தான் உண்டாய் சகலத்தையும் உண்டாக்கினதாக கூறுகின்றனர். மேலும் இத் தேவதைகளை இந்துக்களைப் போல அழகிய விக்கிர ரூபமாக அலங்காரம் செய்து வழிபடுவார்கள். மிருக பலியும் கொடுப்பது பழக்கத்தில் உள்ளது.

## எகிப்து தேசம் மதம்

ஆப்பிரிக்காவின் வடகிழக்கிலுள்ள எகிப்தில் மூன்று வித மதங்கள் அனுஷ்டிக்கப் படுகின்றன. ஒரு சாரார் ஆதிகடவுள் உண்டென்றும் இவரே சராசர பிரபஞ்ச மென்றும், மறு பிறப்பு உண்டென்றும், ஆன்மா அழிவற்றதென்றும் இந்து மத அத்து-வைதத்தை தழுவிய கொள்கையுடையவர்கள்.

மற்றொரு சாரார் புராண சம்பந்தகங்ளுக் கிணங்க, சடங்குகளையும்' பூஜைகளையும், பிராயச் சித்தங்களையும் செய் வதால் மோக்ஷம் உண்டு என்று கருத்து இருந்தும், புதுப்புது கோவில்களை ஏற்படுத்தி பல பிராணிகளைப் பாவ நிவர்த்திக் காகப் பலி கொடுக்கும் வழக்கம் உடையவர்கள்.

செத்த பிணங்களை ஒசரிஸ் தேவன் சந்நிதியில் எழுபது நான் வைத்திருந்து கடைசியில் அங்குள்ள திராசில் ஒவ்வொரு வரின் புண்ணிய பாபங்களை நிறுத்துப் பார்த்த பின்னர் அடக்கம் செய்கிறுர்கள்.

## காத்தி நேவியர் அல்லது பியுடனிக் மதம்

இவர்களுடைய பூர்வம் ஆரிய வமிசத்தினின்று பிரிந்த ஐரோப்பியருடன் கூடி ஐரோப்பா கண்டத்தின் மத்திய பாகத் தில் ஆடுமாடுகளை மேய்த்து, கடைசியாக ஜர்மனியராகவும், டச்சுக்காரராகவும், பிரஞ்சுக்காரராகவும் ஆங்கிலோ சாக்ஸனர்

களாகவும் ஐரோப்பா கண்டத்தின் பலவிடங்களில் பரவியதாக வரலாறு. இதனால் இவர்களை இன்ன சாதியாரென்று திட்டமாகச் சொல்லயியலவில்லை.

கொலம்பஸ் அமெரிக்கா கண்டத்தைக் கண்டுபிடிப்பதற்கு ஐந்நூறு வருஷத்திற்கு முன்னமே இந்தக் காத்தி நேவியர் அமெரிக்காவை கண்டவர்களாக சில சரித்திரம் உள்ளது. இவர்கள் ஜர்மனி முதலிய பாஷைகளிலிருந்து உற்பத்தியான நார்ஸ் என்னும் பாஷையைப் பேசுகிறார்கள்.

இவர்களின் தத்துவப்படி உலக சிருஷ்டியாவது; ஆதியில் அபிஸ் என்கிற பிண்டமானது உத்தர தட்சண உலகமாகயிருந்ததாகவும் இதன் பேரில் வெனம் என்னும் மழை பெய்கையில் தக்ஷ்க்ஷணத்திலிருந்து மோதிய காற்றினால் அந்தப் பிண்டம் கரைந்து போனதாகவும், அப்படிக் கரைந்த பிண்டத்திலிருந்து "இமிர்" என்னும் ஓர் ராக்ஷ்க்ஷன் பிறந்த அவனுடைய மாய்கையினால் மாண்டான் என்னும் பசு பிறந்ததாகவும், அந்தப் பசுவினிடம் போர் ஓடின விலாயென்னும் ராக்ஷ்க்ஷஸனை கொன்றதும், அந்த ராக்ஷ்க்ஷஸன் உடலே வானமும், பூமியுமானதாகவுஞ் சொல்லுகிறார்கள். இவருக்குப் பதினைந்து விதப் பெரிய தெய்வங்களும் அநேக சில்லரைந் தெய்வங்களும் "ஓடின்" என்னும் முதல் தேவனை "ஆல் பாதர்" உலக பிதாவொன்றும் சிருஷ்ட்டி கர்த்தா வென்றும், இவர் ஆஸ்காவென்னும் விருக்ஷ்க்ஷத் தடியில் உட்கார்ந்திருப்பவரென்றும் பூமியே இவருக்கு மனைவியென்றும், இவருக்கு (தார்) என்னும் ஒரு குமாரனுண்டென்றும், அந்தத் தேவனுக்கு பிலஸ்கீர்னிர் என்னுமிடத்தில் 540 கோயில்கள் உண்டென்றும், ஒவ்வொரு கோயிலும் ஒவவொரு விதம் என்றும், இரண்டு ஆட்டுக்கிடாக்களால் இழுக்கப்பட்ட இரதமுடையவரென்றும், அவர், அபூர்வ சக்தி வாய்ந்தவர் என்றும் சொல்லப்படுகிறது. உட்பிரிவுகள் அநேகம், வேறுபட்டால் மத வாதங்களும் ஆசாரகிருத்தியங்களும் மாறுபட்டுள்ளது.

## மெக்சிகோ தேசித்தார் மதம்

இத்தேசம் அமெரிக்கா கண்டத்தில் உள்ளது. இத்தேசவாசிகள் முரட்டு சுபாவத்துடன் காட்டு மனிதர்களாகத் தோன்றுவார்கள். இவர்கள் சூரிய பகவானையே பராபாவத்துவாக நம்பி வணங்கி வந்தார்களாம்.

வரலாறு மூலம் விட்ஜலி புட்வலி என்னும் வேத புருஷன் மலை மீது பட்சி ரூபமாக உட்கார்ந்ததாகவும், அதன் பிறகுதான் மெக்சிகோ என்னும் பட்டணம் கட்டியதாகவும், அப்பட்டணத்தின் பெயரையே வகித்த ஒரு கிரமமான மனிதன் ஏற்பட்டு அவனால் ஆலயம் முதலியவை கட்டப்பட்டு மனிதர் என்கிற நாகரிகத்தை யாவருக்கும் வெளிப்படுத்தி சீர்திருத்தம் செய்தாகவும் தெரிகிறது.

பியாசு என்னும் பெரிய தேவன். இவருக்கு உலகமே சிம்மாசனமாக கையால் கோளவடிவாய் ஆசனம் செய்து இருபுயத்திலும் சிறகுகளுள்ள பாவனையாய் உருவு செய்து அதன் கைகளில் பலவித ஆயுதங்களும் அனேக வித பாம்புகளும் பிரதிமைகளும் செய்து வணங்குகின்றார்கள்.

மெர்குரி என்னும் தெய்வத்தைத் தனதானிய லக்ஷ்மியாக வணங்கி, பூமியே தேவனாக நம்பி வருடா வருடம் அனேக நரபலிகளும் கொடுக்கின்றனர். இவர் ஆலயங்களில் மனிதர் மண்டையோடுகளைக் கட்டி ஏராளமாய்த் தொங்க விட்டு பல விதப் பாம்புகளை அன்புடன் வளர்க்கிறார்கள். பூசாரிகளைக் கொண்டே பயபக்தியுடன் தெய்வ வழிபாடு செய்து சில சமயங்களில் பத்து நாள் உபவாசத்துடன் நோன்பும் பண்டிகையும் கொண்டாடுகிறார்கள்.

## கினியா தேசத்து மதம்

படிப்பு, நாகரிகம், சாஸ்திரங்கள் பூசாரிகள் என்று இல்லாதவர்கள் ராஜ சிம்மாசனம் ஏறுவதையே சிறந்த உற்சவமாகக் கொண்டாடுவார்கள். ஆனால் செவ்வாய்கிழமையே தொழுகை நாளாகக் கொண்டு கோழி நரபலியுமிடுவார்கள். இடி விழுந்த இடங்களில் வீக்கிரக ரூபங்களை வைத்து வணங்குகிறார்கள். இவர்கள் தீங்கையே குணமாக உடையவர்கள். இவர்களுடைய துஷ்ட்ட தேவதைகள் கருநாயைப்போல் வந்து தீங்குகளைச் செய்யுமாம்.

## பெனின் அட்டாரா தேச மதம்

ஓர் பெரிய கடவுள் உள்ளார். அவர் நல்லவர் ஆனதால் அவருக்கு வழிபாடுகள் வேண்டாமென்றும் கருதி, துஷ்ட தேவதைகளுக்கு நரபலியும், மிருக பலியும், கொடுத்து பாவ மன்னிப்புப் பிரார்த்தனை செய்து வருகிறார்கள். இவர்களில்

மாதரும், பிள்ளைகளும் கடவுளை வணங்குவது கிடையாது. பிரப்புக்களும், ராஜாக்களும் இறந்தால் அவர்களுக்கு வைகுந்தம் போகத் துணையாய் நாலைந்து ஆள்களையும் கூடப் போட்டுப் புதைக்கின்றனர். இவர்கள் யுத்தத்திலிறப்பதே மோக்ஷக்ஷம் என்று கருதுபவர்கள். அதனால் இறப்பவர் கைகளைப் பின் பக்கங்கட்டி நிறுத்தி வில்லையும் அம்பையுங் கொண்டலங்கரித்து சமாதி செய்வார்கள்.

## கான்கோ மதம்

இவர்களுக்கு ''கொங்கா காம்பரு'' என்னும் தேவதை குறிகளைச் சொல்லும் ஔவையாரென்று நம்பி பூஜிக்கிறார்கள். இத்துடன் சாம்பார், பாங்கோ என்னும் விக்கிரகங்களையும் இவர்களுடைய இராஜாவே தேவனென்றும் வணங்குவார்கள். கான்கோவில் ''மீராம்பர்'' என்னும் பயங்கர மந்திர விக்கிரஹத்தை சயசீலர்கள் வணங்குகின்றனர். சிலர் பாம்பு, புலி, ஆடு மாடுகளையும் வணங்குகின்றனர். இவர்களுடைய குருக்கள் வியாதியாளாரைக் கொண்டு வரும்போது அவர்கள் சுகத்துக்காக ஓர் சிறு விக்கிரகத்தைக் கொடுக்கின்றனர்.

## அங்கோலியர் மதம்

இவர்கள் கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள் அனேக சில்லரை தேவ வணக்கமும் உள்ளது. குருவினிடம் விசுவாசமுள்ளவர்கள். இவர்கள் விக்கிரஹம் பன்னிரண்டடி நீளமுள்ளதாக இருக்க வேண்டும் என்று ஓர் விதி உள்ளது.

## அரக்கான் தேச மதம்

இவர்கள் மறு பிறப்பையும் கடவுளுண்டென்பதையும் நம்புபவர்கள். இவர்கள் குருக்கள் மஞ்சள் வஸ்திரம் தரித்து சன்னியாசிகளாக இரிக்கிறார்கள். பல தேவர்களை பூஜித்தாலும் முக்கிய தேவனை விக்கிரக ரூபமாகச் செய்து அதனை வாகனங்கள் மீது வைத்து பவனி வரும் பழக்கமும் உண்டு. இத்தேசத்து மக்கள் நான்கு மனைவிகள் வரையும் அரசர்கள் பன்னிரண்டு மனைவிமார்களையும் மணம் புரிவார்கள்.

## காபிரிகள் மதம்

ஆப்ரிகா தென்பாகத்துள்ள காபிரிகளுள் சிலர் முகமத்திய மதத்தை உடையவர். சிலர் கடவுளொருவர் உண்டு என்று விக்கிரகரூபமாக பூஜிக்கிறார்கள். சிலர், சூரியர்,

சந்திரர், நக்ஷக்ஷத்திரங்களை வழிபடுகிற பழக்கமுள்ளவர். ஆடுமாடு பலி கொடுக்கும் பழக்கமுள்ளது. விபசாரிகளை உடனே கொலை செய்து விடுவார்கள் ஆனால் விதவைகள் புனர் விவாகஞ்செய்து கொள்வார்கள்

## தார்த்தாரி மதம்

ஆசியாவின் வடபாகத்திலுள்ளவர்களை . தார்தாரிய ரென்று கூறுவர் இவர்கள் மார்ஸ் என்னும் ஒரு தெய்வத்தை விக்கிரகாராதனையோடு குதிரைகளை பலியிட்டு வணங்குவர். குதிரையின் சவுக்கையும் தெய்வமாகக் கருதுவார்கள். இவர்களுக்கு கிடிகே சிருஷ்ட்டி கர்த்தாவும் சந்நியாசி குருவுமாவர்.

இவர்களில் சிலர் பூமியே தேவனென்றும் கூறி வந்த அர்த்தராத்திரியில் பூமியிற் புரளும் வழக்கம் பழக்கத்திலுள்ளது. இன்னும் சிலர் சூரிய சந்திரர் பெரிய தெய்வமென்று பலியிடு மிருகங்களைத் தலைகீழாய்த் தூக்கி மரங்களில் கட்டி வணங்குவர். இவ்வினத்தினர் நாற்பது வயதுக்கும் மேல் மணம் புரியமாட்டார்கள்.

இவர்கள் இறந்தவரைப் புதைக்காமல் மரத்தில் கட்டி காய்ந்த பிறகு நெடுநாளைக்குப் பிறகு ஆபரணங்கள் பூட்டிப் புதைப்பார்கள்.

## ஜப்பான் மதம்

இம் மதம் ஹிந்து மதம் போல் இருந்தாலும் இவர்களில் சிநிசிச செடோரியஸ் பாக்குச்சு, ஜிம்மா போசு வகுப்புகள் உள்ளன.

இரண்டாயிரத்துக்கு மேல் தங்க வண்ண ஆலயங்களின் வாயிலில் பூததலையைப் போல் விக்கிரகங்களுண்டு இவர்கள் படங்களையும் பின்னர் விக்கிரகங்களையும் பூஜிப்பவர்கள். இதில் வியாபார விருத்திக்காக ஜெபிசு தேவரையும் தன தான்னியத்திற்காக டகாகு தேவரையும்; நல்ல லாபமடைய டாசிடோகா; தேவரையும் சந்தோஷத்திற்காக போட்டி தேவிரையும்; குல விருத்திக்காக சிவரன் தேவரையும்; வேட்டையில் வெற்றிகாண சவா தேவரையும்; பிசாசை யோட்ட பிட்சுமான் தேவரையும் வணங்குவார்களாம். இறந்தவர்களைச் சுட்டு சாம்பலைத் தான் புதைப்பார்களாம்,

## சீயமதம்

இவர்கள் புஷ்பத்திலிருந்து உற்பத்தியான சோமன் கூடம் என்னும் தேவனை வணங்குவார்கள். ஆட்டுக்குட்டிகளைப் பலியிடுவார்கள். ஜப்பான் மதத்தினரைப் போல் இறந்தவரைச் சுட்டு சாம்பலைப் புதைப்பார்கள்.

## பெருவியன் மதம்

இவர்களின் சிருஷ்டி கர்த்தா ''பச்ச கரமிக்கு என்னும் தேவர். இவர்களின் சீரஞ்சிவியான தெய்வம் ''ஹனகா'' என்று கூறுகிறார்கள். சூரிய, சந்திரர்களையும் வணங்குகிறார்கள். மறுபிறவி என்பதில் நம்பிக்கையுள்ளவர் தங்கை, தமக்கைகளை மணம் புரியும் வழக்கம் உள்ளது. ஆனால் பாபஞ் செய்தவர்களின் மூக்கு, உதடு, விரல் இவைகளை அறுத்து இரத்தத்தை வடிய வைக்கின்றனர்.

## நியூசவுத்துலாந்து கானடா மதங்கள்

இவர்களின் கருத்து; அம்பினால் பூமியைப் பிளத்து அதினின்று ஆண், பெண்களையுண்டாக்கிய பிறகு உலகம் உண்டானதாகவும் ஆட்டுக் குட்டிகளும், ராஜாக்களும் இறந்த பிறகு தேவர்கள் என்றும் கூறுவர். ஸ்திரீகள் சூரியனை மாத்திரம் வணங்குவர் இவர்கள் நதியைக் கடக்க வேண்டியிருந்தால் நதி பூஜை செய்த பிறகு தான் நதியைக் கடப்பார்கள். இவர்கள் மாதா, பிதா, குரு, சூர்யனை வணங்குவர். இவர்கள் நால்வரும் ஒரே தேவர் என்று கருதுபவர்கள்-

## பைகோ மதம்

ஐந்து தேவரை வணங்குபவர். இவர்கள் சோம வாரத்தை தொழுகை நாளாக உடையவர். இவர்கள் குமாரர்கள் ஒரே வேளைதான் போஜனம் செய்பவர். இவர்களில் சிலர் மூன்று மாதம் பிசாசோடு வளிப்பார்களாம். இவர்கள் கோவிலில் லக்ஷ்க்ஷத்துக்கு மேல் விக்கிரகளுண்டாம்.

## பிலேப்பியன் மதம்

இவர்களில் சிலர் ''அப்பாவெனுத் தேவனை விக்கிரக ரூபமாக வைத்து வணங்கினார்கள். இது தவிர சூரிய சந்திராதிகளை வணங்குவர்,

## மலக்கா மதம்

இவர்களில் பெரும்பாலோர் மகமத்திய மதத்தை அனுசரிப்பவர்கள். மந்திர தேவதைகளையும் துஷ்ட்ட தேவதைகளையும் விக்கிரஹக ரூபமாக வணங்குகின்றனர்.

## போர்னியோ சுமித்திர திவுகளின் மதம்

பெரும்பாலோர் இஸ்லாம் மதத்தையும் வெகு சிலர் பலப்பிய மதத்தையும் அனுசரித்து நடப்பவர்கள். பட்சி சகுனத்தில் நம்பிக்கை யுள்ளவர்கள். தேகமும் ஆன்மாவும் நிர்மாணத்தை பெறுமாம்.

## ஜாவா தேச மதம்

ஆதியில் சந்திர சூர்யரை வணங்கிவந்தார்கள். படலியா முபலிய குறிஸ்து மதஸ்தராயிருக்கின்றனர். கிறிஸ்துவ மத அனுஷ்டானம் செய்து வருகிறார்கள்.

## இலங்கையர் (ஸிலோனிஸ்)

ஆதியில் நவக்கிரஹங்களை பூஜித்து பிறகு புத்த மதம் பரவி தழிபட்டார்கள். இதன் பிறகு கிறிஸ்துவ மதம் பரவி மருவிய கிறிஸ்துவ மத அனுஷ்டானம் உள்ளார்கள். இங்கு எல்லோரும் படிப்பாளிகள்.

## மலாய தீவின் மதம்

பெரும்பாலோர் மகம்மதிய மதத்தர்ராக இருந்தும் பஞ்ச பூதங்களையும் தெய்வமாக நம்புகின்றனர். இவர்களில் சிலர் காற்றையும், கடலையும் தெய்வமாக நம்பி ஆடு கோழி பலியிட்டு வழிபடுகிறார்கள் இவர்கள் விசேஷ காற்றிலும், கடலிலும் எச்சில் துப்பமாட்டார்கள்.

## லாப் லாந்தியர் மதம்

இவர்கள் ஜூமாலா அஜிகா, டெர்ஜன் காரா, பெயுமி என்னும் தேவர்களை வணங்குவார்கள். இவர்களும் ஆடு கோழி பலியிடுவார்கள். இவரில் யாராவது இறந்தால் ஆறு மாதம் வரை வீட்டை விட்டு வெளியே போக மாட்டார்கள்.

## மசிசிபி தேசம் மதம்

சூரியனை வணங்கி வழிபடுவோர். உலகம் பெண்ணால் தான் படைத்தாகக் கூறுகிறார்கள். சூரியனை தவிர 'ஓடகாம்' என்னும் தெய்வத்தை வணங்குபவர். ஆற்றில் வெள்ளம் வரும் போது மரியாதைக்காக கரடித் தோலைக் கட்டுவார்கள்.

## பிலோரிடியன் மதம்

இவர்கள் பிசாசை வணங்கி பல கோவில்கள் கட்டி விக்கிரகத்தை வணங்காமல் செத்தவர்களையும் சூரியன்முன் முழங்கா லிட்டு வணங்கி தேனையும்; சாம்பிராணி புகையும் ஆராதிக்கின் றனர். இவர்களில் பிலோரிட சாதியார் என்பவர் தங்கள் முதற் குமாரனை இராஜாவுக்கும் தேவருக்கும், பலியிடும் பழக்கம் உள்ளவர். இறந்தவர்களை வாசனையோடு பெட்டியிலடக்கி மூன்று வருஷம் பூஜிப்பர். மறுபிறப்பு; மோக்ஷ்க்ஷம் நரகம், உண்டென நம்புகின்றனர்.

## காரபிதீவார் மதம்

துஷ்ட்ட தேவதைகள், பிசாசு இவைகளை விக்கிரக ரூபமாக வணங்குபவர். வேறு சிலர், தேவனும் சில்லரை தேவர்களுமுண்டென்றும் உபாசிப்பார்ள். தேகத்தில் பல ஆன்மாவுண்டு அந்த ஆன்மா செய்த பாபத்தை மறு பிறப்பி லேனும் அது அதுவே அடையுமென்று நம்பிக்கையுள்ளவர்கள்.

## நாத்திகம் வளர்ந்த வரலாறு

இறையுணர்வினை அடிப்படையாகக் கொண்டுதான் பல்வேறு மதங்கள் உலகில் தோன்றின. மதங்கள் தோன்றிய உலகல் பகுதிகளின் சூழ்நிலைகளுக்கேற்ப மதச்சடங்குகளும் வகுக்கப்பட்டன.

நாளடைவில் அச்சடங்குகளே சமயங்களின் சாரம் என்று மக்கள் கருதத் தலைப்பட்டனர். சடங்குகளின் வேறு பாட்டால் சமயங்கள் மாறுபட்டன. மாறுபட்ட சமயத்தினரி டையே போட்டியும் பூசலும் தோன்றின. சமயங்கள் அனைத்தின் சாரம் இறையுணர்வு தான். இறையுணர்வினை மட்டும் கருத்திற் கொண்டால் சமயங்களிடையே வேறு

பாடில்லே. மாறுபாடில்லே சாரமில்லாத சடங்குகளே எடுத்துக் கொண்டு சமயங்களிடையே வேற்றுமைகள் வளர்க்கப்பட்டன. இன்னும் வளர்க்கப்படுகின்றன.

சமயம் என்பது சடங்கிகளில் தான் அடங்கியிருக்கிறது; சடங்குகள் இன்றிச் சமயம் இல்லே என்று சமயவாதிகள் அடித்துக் கூறுவதைப் புடித்துக்கொண்டு சமயங்களனேத் தையுமே சாடினர் சிலர்.

பொருளற்ற சடங்குகளின் புன்மையினேக் காட்டி மதங் களனேத்தையும் அவர்கள் மறுத்தனர். இவ்வாறு நாத்திகம் வளர்ந்தது.

சடங்குகளே சமயம் என்கின்றனர் சமயவாதிகளான ஆத்திகர்கள் சடங்குகளின் வழக்குகளேக் கூறி சமயங்களேயே மறுக்கின்றனர் நாத்திகர்கள்.

இறையுணர்வு என்ற உண்மையினே மறந்தனர் ஆத்திகர் கள்; எனவே அந்த உண்மையினே மறுத்தனர் நாத்திகர்கள்.

சமயச் சடங்குளில் உள்ள பொருளற்ற வழக்கங்களேயும், அருளற்ற செயல்களேயும் எடுத்தே கூறும் எழுத்துக்களே இன்றைய நாத்திகத்தின் இலக்கியங்களாக இருக்கின்றன சமயச் சழக்குகளும் சாத்திர அழுக்குகளுமே நாத்திகம் என்ற மரம் வளருவதற்கு உரமாகப் பயன்படுகின்றன.

பொய்மைச் சாஸ்திரங்களும், புன்மைச் சடங்குகளுந் தான் நாத்திகம் பேசுவோர்க்கு நல்ல வாதங்கள் ஆகின்றன. சமயவாதிகள் எல்லோரும் தங்கள் மதங்களில் தான் இறைமை விளக்கம் இருக்கிறது என்று அரற்றி அலேகின்றனர் என்பது மாணிக்க வாசகர் அருள்வாக்கு :—

''சமயவாதிகள் தத்தம் மதங்களில்
அமைவதாக அறற்றி மலேந்தனர்''
(திருவாசகம்)

''ஆத்த மாஞர் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்த ழும்பேறினர்''
என்கிருர் வாசகர் (திருவாசகம்)

இறைமை என்று ஒன்றும் இல்லே, என்பது தானே நாத் திகம்? ''இல்லே என்ற தன்மையையும் கொண்டது தான்

இறைமை'' என்று இறைமையின் ஏற்றத்தை விளக்குகின்-றனர் மெய்யடியார்கள்.

உணர்வாக உள்ள இறைமையினை எவரும் மெய்ப்பித்துக் காட்ட இயலாது. அது அறிவுக்கும், ஆராய்ச்சிக்கும் அப்பாற் பட்டது என்று கண்டோம். எனவே உணர்ந்தோர்க்கு இறைவன் உள்ளான். உணராதோர்க்கு இறைவன் இல்லான்.

''இல்லானை, எவ்விடத்தும் உள்ளான் தன்னை
(தேவாரம்)

என்கிறார் நாவுக்கரசர்.

''இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை

என்று திருமூலர் பாடுகிறார்.

''உளன், இலன் என்ற இரு குணங்கள் இறைமைக்கு உண்டு. இவ்விரு குணங்களோடு எங்கும் ஒழிவின்றி பரந் துள்ளான். இறைவன்! என்ற உயர்ந்த ஞானத்தினை கூறு-கின்றார் நம்மாழ்வார்.

''உளன் என இலன் என இவை குணமுடைமையில்
உளன் இரு தகைமையொடு ஒழிவிலன் பரந்தே''
(திருவாய்மொழி)

இறைமை என ஏதும் இல்லை என்று கூறும் ''நாத்திகத்தையும்'' புரிந்து கொண்டு, இறைவனை ''உள்ளான்'' ''இல்லான்'' என்றும் ''உளன், இலன்'' என்ற இரு குணங்களும் உடையவன் என்றும் அடியார்கள் விளக்கும் அற்புத ஞானத்தினை என்னென்பது.



# மலரும் மணமும்

''அஞ்சி யாகிலும் அன்புபட்டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ''

என்ற அப்பர் திருவாக்கின்படி, காமியமாகவோ, நிட்காமிய மாகவோ இறைவனைத் தவருமல் வழிபடல் வேண்டும் என்பதே சாத்திரங்களின் கருத்து. அதனுல் இந்நூற்கும் அதுவே கருத்தாகும்.

இறையுணர்வு என்ற மணத்தை மக்களுக்குப் புலப்படுத்தும் நறுமலர்களாகவே நல்ல மதங்கள் அனைத்தும் விளங்குகின்றன. உலகப் பகுதிகள் ஒவ்வொன்றின் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மதங்கள் என்ற மலர்களின் வண்ணங்கள் அமைந்துள்ளன. அம் மலர்கள் வண்ணங்களில் வேறுபட்டிருந்தாலும் மணத்தில் வேறுபடுவதில்லை. பொதுவாக ஒரு பொருளின் நிறந்தானே நம் கண்களைக் கவருகின்றது? எனவே சமயங்கள் என்ற மலர்களின் பல்வேறு வண்ணங்களே மக்களின் மனத்தைக் கவர்ந்தன, மணத்தைவிட நிறங்களில் கவர்ச்சி அதிகம் ஆதலால் மக்களில் பெரும்பாலோர் மலர்களின் மணத்தை நுகராமல் அவற்றின் நிறங்களில் மயங்கிவிட்டனர்!

மணத்தை விட நிறமே முதன்மையானது என்று கருதும் நிலை எழுகின்றது.

நிறங்களால் ஈர்க்கப்பட்ட மக்கள் தங்களுக்கு உகந்த நிறம் எதுவோ அந்த நிறப்பூவே உயர்ந்தது என்று கூறத் தலைப்பட்டனர். மணத்தைப் பொறுத்து ஒரே நிலையில் உள்ள மலர்களை நிறத்தின் அடிப்படையில் வேறுபடுத்தி, ஒன்றை மேலென்றும் மற்ருென்றைக் கீழ்மென்றுப் பேசத்தொடங்கினர்.

வெள்ளை நிற மலர்தான் விரும்பத்தக்கது, என்று சிலர், சிவப்பு நிறப்பூவே சிறந்தது என்று சிலர், மஞ்சள் நிற மலரே மதிப்புடையது என்று சிலர், இவர்கள் எல்லாம் மலரின் வெளித் தோற்றமான நிறங்களிலே மயங்கி நின்ற மக்கள்; ஆனுல் அம் மலர்களின் மணத்தை மறந்தனர், உண்மைக் குணத்தை மறந்ததால் நிறங்களின் வேறுபாடுகள் மலர்களிடையே மாறு

பாடுகளை வளர்த்தன. ஒற்றுமையினை உணர்த்தும் மணம் மறக்கப்பட்டதால் நிறங்களின் அடிப்படையில் வேற்றுமை பெருகியது. மலர்களில் இருந்து மணத்தை நுகர வேண்டிய மக்கள் அம்மலரின் நிறங்களை நுகரத் தலைப்பட்டனர்.

நிறங்களுக்கு ஏது மணம்?

நிறங்களின் கவர்ச்சியில் மயங்கி நிறங்கள் தான் மனம் என்று கருதி நிறங்களைப் போற்றத் தொடங்கினுர்கள். மணம், நிறம் என்று என்று வாதப் பிரதி வாதங்கள் எழுந்ததின் காரண மாக போட்டி வலுத்தது! போட்டி போராட்டமாக உருவெடுத்-தது, எவவளவு கேலிக் கூத்தானது. இதே போன்றது தான் பல்வேறு சமயங்களுக்குள் நிகழும் போட்டியும், போராட்டமும்.

உறையுணர்வினை அடிப்படையாகக் கொண்டுதான் பல் வேறு மதங்கள் உலகில் தோன்றின. மதங்கள் தோன்றிய

உலகப் பகுதிகளின் சூழ் நிலைகளுக்கேற்ப மதச் சடங்குகளும் வகுக்கப்பட்டன. நாளடைவில் அச்சடங்குகளே சமயங்களின் சாரம் என்று மக்கள் கருதத் தலைப்பட்டனர். சடங்குகளின் வேறுபாட்டால் சமயங்கள் மாறுபட்டன. மாறுபட்ட சமயத்-தினரிடையே போட்டியும் பூசலும் தோன்றின- சமயங்கள் அனைத்தின் சாரம் இறையுணர்வு தான். இறையுணர்வினை மட்டும் கருத்திற் கொண்டால் சமயங்களிடையே வேறு பாடில்லை,, மாறுபாடில்லை.

''முழு நம்பிக்கையுடன் எந்தத் தெய்வத்தை யார் வணங்கினுலும் அது என்னை வணங்குவதேயாகும்.

(பகவத் கீதை. 9—23).



# RELIGION AND POLITICS

PROF: R. NATARAJAN

The demi-gods of Science and Technology are alleged to have shaken the very edifice of Religion and culture in the twentieth century. But, infact, Science and Technology are not basically opposed to religious and cultural pursuits. While it is politics that lays its axe at at the root of all spiritual pursuits, Science and Technology, for no fault of theirs, stand to bear the blame and shame.

Was it Science that put Socretes to death? who killed Becket, the Arch-bishop of Canterbury? what was behind the persecution of the Jews? Politics and nothing but politics. Anywhere in history we find politics and religion at loggerheads. History could make and mar religions. For offence and defence in political feuds, Religion has been employed both as a sword and a shield. History bears evidence that politics has ever been playing havoc with religious affairs, and more so in the twentieth century.

With power and pelf as prime movers, modern politics swears against every accredited doctrine of religion. It has been rightly observed: "Power corrupts and absolute power corrupts absolutely." Calls it by any name, monarchy, -iol garchy, Despotism, Democracy, Republic; all are synonymous of one and the same creed-the creed for power and money. In the power. crazy-politics-ridden modern world, where is room for religion,

which calls for renouncement of allpower and property? In the militant reign of Mammon, where is room for religion?

Gone are the days of Sri Rama, Siddharta, Asoka, Despite all our tall talks on religion, we do not seem understand our epics, legends and history in their fullness. Seek answers for these questions; why should Rama, such a noble prince, go to forest, leaving the rule of the land to his brother? Let Bharata rule, but Rama could have stayed on the palace? why could it not be? Why should Siddharta desert his family and leave the frontiers of his nation! could he not stayed on with Suddhotana in the royal abode? They had to desert everything, because only in renouncing mundane power, they could enter the realms of spirituality. Mahatma Gandhi who lives on the lips (and only on the lips!) of everyone declined to take up any position in the Government. It is to be remembered that as an Apostle of Truth and Peace it was he who spoke of 'spiritualising politics. 'Instead of spiritualising politics we have ritualised politics and politicalised religion Not even thirty years have passed since his assassination. we find the name of Gandhi being commercialised by every politician who is after 'power', pomp and pelf. None rises against this situation codemning it blasphemous! This is because we have learnt to accept politics in all its blasphemous garb and garb. We still believe that camels can pass through the eye of needle,

Religion Language and caste are frequently exploited during elections and political agitations before and after Elections. Ironically the same politicians

prattle 'secularism', whine and wile after religion as to their whims and fancies.

God is gracious! In politics, theists, and atheists, pseudo-theists and pseudo-atheists-all thrive alike!

We may not hope to have Mahatmaswho can spiritualise politics with religion. But should we have politicians who use religion as a scape-goat?

Science and Technology help religious pursuits, numerous devotional songs are being played on through all communication media. Science could help us further, it shall never stand against religion and culture. But, with palitics, the tables are turned. Gone are the days when rulers were held in esteem as messiahs of God, patrons of religion and culture. Our politicians can tempt even Satan and his tribe.

Hence the author's appeal to all theologists in this: "please do not take politicians an patrons; do not allow the politicians to exploit religion. Redeem Religion from the Inferno of Politics; or else Religion cannot redeem us-Beware!"

*Prof. R. NATARAJAN M A,.*
Principal,
Devasthanam Arts College,
RAMESWARAM.

ஸ்ரீ சுக்கர பகவான் நான்கு கைகளிலும், தண்டம், கமண்டலம், அக்ஷசூத்திரம் வரஹஸ்தம் வெண்ணிற ஆடை உடுத்தி பூ பூச்சு **"வயிரமாலே"** அணிந்து எட்டுவெண்குதிரை பூட்டிய தேரில் வெண்கொடியின் கீழ் அமர்ந்து மேருவை வலம் வருபவர், சூரியனுக்கு கிழக்கில் பஞ்சகோண பீடத்தில் **"வெள்ளி"** பிரதிமையாக கிழக்கு முகமாக விற்றிருப்பவர் மீனத்தில் 27 டிகிரியில் உச்சத்தில் உச்சனுனதால் **"தோஷமில்லாத வைரமும்"** குரு உச்சத்தின் பயனுசை ஒளி பொருந்திய மஞ்சள் நிற நவநாகரீக **"தங்கஆபரணங்கள்"** பீடத்தில் பிரதிமையாக பரிசளிக்க **"வெள்ளி"** சாதன உருப்புகள் **"வரலெஷ்மி"** பிம்பங்களுக்கு :-

"Science increases our powers as it
Lessens our pride.

In Science we must be interested in
Things, not in persons.

ஓம்

ஜெய ஜெய சங்கரா ஹர ஹர சங்கரா

நாம் ஒவ்வொருவரும் பிறருடைய செயல்களுக்காக கவலைப் பட்டுக்கொண்டும், பொருமைப் பட்டுக் கொண்டும் காலத்தை வீணுக்காமல் வாழ்நாளை பகவத் தொண்டிலும், சமூகத் தொண்டிலும் ஈடுபட்டு பொறுமையுடனும் பொறுப்புடனும் மனச்சாட்சியுடனும் நம் கட-மையை செய்ய வேண்டும் என்ற மனப் பான்மையுடன் செயலாற்றி வந்தால் கடவுள் அருள் சித்திப்பதுமல்லாமல் லோக க்ஷேமமும் உண்டாகி ஆண்டவன் அருள் எல்லோருக்கும் கிடைக்கும் என்பதை மனதில் ஊன்றி வாழ்-நாளை வீணுக்காமல் நன்மையை அடைவோமாக.

''எல்லோருக்கும் மங்களம் உண்டாகுக''

1. உலக ஆசைகள் மனத்தை மேக மூட்டமாகக் கவ்வுவது உண்மை. ஆனால் மேகத்தை அடித்து விரட்டும் காற்று ஒன்று உண்டு. பகவத் நாமமே அந்த காற்று.

2. மற்றவை அனைத்துக்கும் தன்னை இழைய விட்டுக் கொண்டு, தன்னை மற்றவர் மீது திணித்து நிர்ப்-பந்திக்காமல் இருக்கிற ஒரு தனிப் பண்பு திராவிட தேசத்துக்கு இருந்து வந்திருக்கிறது. உலகத்தில் இருக்கிற பக்தி நூல்களில் பாதிக்கு மேல் இந்தியாவில் தான் இருக்கிறது. இதில் பாதிக்கு மேற்பட்ட நூல்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தது.

காஞ்சி காமகோடி
பீடாதிபதிகள்.

ஆஸ்தீக அன்பர்கட்கும் தெய்வீக இலக்கிய நூல்கள் வெளியிட்டாருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்.

அன்புடையீர்

ஸ்ரீ காஞ்சி ஆச்சார்யார்யாளின் அருளாசியுடன் விரைவில் துவங்கவிருக்கும் **இலவச வாசக சாலை** ''ஸ்ரீமத் சங்கரர் நூலகத்திற்கு'' சமய, இலக்கிய நூல்களை மனமுவந்து அன்பளிப்பாய் அனுப்பித்தர வேண்டுகிறோம்.

அனுப்ப வேண்டிய முகவரி :-

**"ஸ்ரீமத் சங்கரர் நூலகம்"**
"ஹிந்து சமய இளைஞர் மன்றம்"
267 பாரதியார் சாலை (பைகிராப்ட்ஸ்)
புதுப்பாக்கம் (இராயப்பேட்டை அஞ்சல்)
சென்னை—600014